*K̲umaran̲*

*Āram 6, muttu 38*

*May 02, 1929*

Record no. 313

Reg. No. M. 1823. 16 பக்கங்கள். விலை 0-1-6.

# குமரன்

The "Kumaran" Published Every Thursday.

ஆரம் கூ } காரைக்குடி சுக்கில-ஹு சித்திரை-மீ உ0-வ வியாழக்கிழமை (2—5—1929.) { முத்து உ-அ.

வாரப் பதிப்பு

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. ௩-0-0
ஆறு மாதம் ௧-0-0
பிரதி ௧-க்கு 0-௧-௬
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. ௪-0-0

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. ௧-அ-0
வெளிநாடு வருடம்
ஒன்றுக்கு உ-0-0
தைமீ வருடஆரம்பம்

"கதரே உயிர்"

கருணையே தெய்வம்'

# கம்ப நாடகக் காட்சி.

## அங்கதன் தூது.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ. பி. எல்.



வாலியின் மைந்தனாகிய அங்கதன் இலங்கை மன்னனிடம் தூதுசென்று சொல்லிய சொற்களையும் செய்த செயல்களையும் வீரம் செறிந்த ஓர் விழுமிய நாடகமாகக் கம்பர் எழுதிப்போந்த நயம் மிக இன்பம் பயப்பதாகும். அலை கடல் கடந்து அரிக்கணங்களோடு இலங்கை மாநகர்ப் புறம் எய்திய இராமன் அமர் தொடங்கு முன்னமே மாற்றரசனிடம் மற்றொரு முறை தூது போக்கக் கருதினான். அப்பொழுது அருகே நின்ற இலக்குவன் மானத்தால் மனம் கொதித்து அறமே உருவாயமைந்த தமையனை நோக்கி, 'ஐயனே! அவ்வரக்கன்பால் இரக்கம் வைப்பது இழுக்காகும். இனி வில்லாற் பேச வேண்டுமே அன்றிச் சொல்லாற் பேசவும் வேண்டுமோ? தேவியைச் சிறையில் வைத்தான்; தேவருக்கு இடுக்கண் செய்தான்; அந்தணரை அலற வைத்தான்; வாசவன் திருவைக்கவர்ந்தான்; வனத்தில் வதிந்த நமக்கும் வரம்பில்லாத் துயரிழைத்தான்; மாயத்தால் மங்கையைப் பிரித்து மயங்க வைத்தான்; எளியளாய் அலறிய சீதைபால் இரக்கமுற்ற கழுகின் வேந்தனைக் கருணையின்றிக் கொன்றான்; இத்தகைய தீங்கிழைத்த கொடியோன் திருமகளை விடுவானாயினும் அவன் ஆவியைப் போக்காது அருள் செய்தலாகுமோ? அவ்வரக்கன் உயிருடன் வாழ்வானாயின் அவன் தம்பி எவ்வாறு இலங்கைக்கு அரசனாக இயலும்? ஆகவே உனது வாய்மொழியும் வஞ்சினமும் பழுதாகாது போர் புரிவதே பொருத்தமாகும்" என்று உரைக்கின்றான். அவ்வுரை கேட்ட ஐயன் புன்முறுவல் பூத்து வில்லாளனாகிய தம்பியை விரும்பி நோக்கி "ஐய, நீ சொல்லிய முடிவே முடிவாகும். ஆயினும் அறிஞர் ஆராய்ந்து அமைத்த அறநெறியில் செல்வதே ஏற்றதாகும். புயவலியமைந்தோரேனும் பொறுமையாளரே போரில் வெற்றி பெறுவர்" என்று அமைந்த மொழிகளால் அறிவுறுத்துகின்றான்.

° ° °

அப்பால் தூது போக்கத் துணிந்த இராமன் அத்தொழிலை ஏற்று முடிக்கும் ஆற்றல் வாய்ந்த வீரன் யாரென்று எண்ணுகின்றான். முன்னொரு முறை தூது சென்று மீண்ட மாருதியை நினைக்கின்றான். ஆயினும் அநுமனே மறு முறையும் தூது சென்றால் அவனை அன்றி வேறு வீரர் இல்லையென்று மாற்றார் கருதக்கூடும் என்று இராமன் மனத்தில் தோன்றுகின்றது. அநுமனை அன்றி அரக்கரிடையே சென்று மீளவல்ல வீரன் வேறு யாவன் என்று நொடிப்பொழுது சிந்திக்கின்றான். அப்பணிக்குரியவன் அங்கதனே என்று துணிகின்றான். அப்பொழுதே அங்கதனை அழைத்து 'நம்பீ, நிருதர்கோனிடம் நீ தூது சென்று, தேவியை விடுகின்றானோ, அன்றி அமர்க்களத்தில் ஆவியை விடுகின்றானோ என்று இரண்டிலொன்றை அறிந்துவா' என்று பணிக்கின்றான். அவ்வாணையைத் தலைமேற் கொண்ட அங்கதன் உள்ளமும் தோள்களும் ஒருங்கே நிமிர்கின்றன. 'அநுமனுக்கு அடுத்த படியில் அமையும் பெருமை பெற்றேன். யார் இனி என்னை ஒப்பார்?' என்று இறுமாந்து வில்லினின்றும் போந்த அம்பு போல் விண்ணிலே பறந்து செல்கின்றான். இலங்கை மாநகரில் மீண்டும் வாலமைந்த ஓர் வானரத்தைக்கண்ட அரக்கர் 'அநுமன் அநுமன்' என்று அஞ்சி ஓடுகின்றார்கள். இலங்கை வேந்தன் போருக்குரிய படை திரட்டுகின்றான். அவ்வரசனது வீரக்கோலத்தை அங்கதன் நோக்கி வியந்து நிற்கின்றான். அந்தோ சூலம் தாங்கிய காலனும் இவ்வேந்தனை வெல்வானோ? எமது கையில் கல் உண்டு, மரம் உண்டு, ஏழைக்கடலைக் கடந்தோமென்னும் புகழுண்டு. இவற்றால் இவ்வீரனை வெல்லலாகுமோ? இவ்வலியோன் படை தாங்கி வருவானாயின் இராமனது கையிலமைந்த வில்லே நமது கதியாகும்; இத்தகைய வீரனை வென்ற என் தந்தையை ஓர் அம்பால் கொன்ற இராமன் நேராக வந்து போர் தொடுத்தாலல்லது இவனை வெல்ல வல்லார் இவ்வுலகில் உளரோ? இம்மன்னனது முடியில் அமைந்த மணியைப்பறித்து மீண்டு வந்த என் சிறிய [illegible] சிறந்த வீரன் என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ? என்று எண்ணி எண்ணி வியக்கின்றான். அப்பால் கோளரிபோல் அமர்ந்திருந்த அவ்வாள் வேந்தன் முன்னே சென்று குறுகி நிற்கின்றான்.

° ° °

தன் முன்னே தோன்றிய குரங்கினைக் கண்ட காவலன் கண்களில் தீப்பொறி பறக்க 'இங்குவந்த நீ யார்? வந்தகாரியம் யாது? இவ்வரக்கர் கொல்லாதவாறு இப்பொழுதே சொல்?' என்று சீற்றமுற்றுக் கூறுகின்றான். காவலன் கோபத்தைக்கண்டு அணுவளவும் அஞ்சாத அங்கதன் புன்னகையோடு அம்மன்னனை நோக்கி "அரசே! பூத நாயகன், இப்புவிக்கு நாயகன், பூவில் வாழும் சீதை நாயகன், வேத நாயகன், விதிக்கு நாயகன், அவன் விடுத்த தூதன் யான்" என்று தன் தலைவனது புகழைப் பாடுகின்றான். அம்மொழிகளைக்கேட்ட அரக்கர்கோன் நகைத்து, அங்கதனை நோக்கி, "அரன் இருக்க, அரி இருக்க, அயன் இருக்க, மரத்தில் மன்னும் குரங்கையெல்லாம் மறித்துச்சேர்த்து கடலாய சூட்டத்தில் அணைகட்டி இங்கு போந்த பின்னரும் போர் தொடங்காது நின்னைத் தூதனுப்பிய நரனோ உலகநாதன்? தேவரிற் சிறந்த மூவரும் இங்கு வருவதற்கு அஞ்சுவர். அவ்வாறாக ஓர் மனிதனுக்காக அஞ்சாது இங்கு அற்ப உரை நிகழ்த்திய நீயார்?" என்று வினவுகின்றான். அதற்கு மாற்றம் உரைக்கப்போந்த அங்கதன் "ஐயனே, முன்னாள் இராவணன் என்னும் அரக்கனை வாலினால் இறுக்கி மலைகளில் தாவித்திரிந்து, அமரருக்காக அலைகடல் கடைந்து அமுதெடுத்த வீரனது மைந்தன் யான்" என்று விளம்புகின்றான். தன் முன்னே நின்ற தூதுவன் வாலியின் மைந்தன் என்று அறிந்தபோது அரக்கர் கோன் உள்ளத்தில் அன்பும் ஆர்வமும் பொங்குகின்றது. நண்பனது மைந்தனை நயந்து நோக்கி, 'அப்பா, உன் தந்தை என் துணைவனாயிற்றே! தந்தையைக்கொன்ற மனிதனுக்குத் தூதனாய் அமைந்தாயே! இதனினும் இழிவு இவ்வுலகில் உண்டோ? இப்பொழுதேனும் இங்கு வந்தாயே, வானரத் தலைமையை உனக்கு நானே தந்தேன். இதுகாறும் தாதையைக் கொன்ற மனிதன் பின்னே தலை சுமந்து கைதொழுது பேதையனாய் வாழ்ந்தாய். அப்பழி இன்றே ஒழிந்தது. நானே சீதையை மனைவியாகப் பெற்றேன். இனி என்னால் ஆகாத காரியமும் உண்டோ? அம்மானுடர் இருவரும் இன்று நாளை அழிவதற்கு ஐயமில்லை. உன் அரசை உனக்குத் தந்தேன். ஊழிகாலமளவும் நீ ஆள்வாயாக. உன்னை அரியாசனத்தில் அமைத்து அமரர் அனைவரும் போற்ற யானே மகுடம் சூட்டுவேன்" என்று கூறுகின்றான். அவ்வுரை கேட்ட அங்கதன் இருகரங்களையும் கொட்டிக் குலுங்க நகைத்து "ஐய, தூதாக வந்த யான் அரசாள்வது சாலவும் இனிதேயன்றோ? ஆயினும், நாய் அளிக்கும் நல்லரசைச் சிங்கம் பெறுவதுண்டோ?" என்று சொல்லி நகைக்கின்றான்.

அப்பொழுது அரக்கர்கோன் அடங்காச் சீற்றமுற்று தூதுவந்த கருமத்தைச் சொல்லுமாறு பணிக்கின்றான். அந்நிலையில் அங்கதன் அரசனை நோக்கி "அரக்கர் தலைவனே! இராமனது தேவியை விடுகின்றாயோ, அன்றி செருக்களத்தில் ஆவியை விடுகின்றாயோ, என்று அறிந்துவருமாறு அருள் நிறைந்த ஐயன் என்னை அனுப்பினான். உன் பாட்டியாய தாடகையைக்கொன்று பருந்துக்கு விருந்தாக்கியும், மருந்தினுமினிய உன் மாமனை மாரீசனை மாய்த்தும், வனத்தில் வந்த உன் தங்கையின் மூக்கரிந்தும், நல்லோர்க்குக் களையாய் அமைந்த உன் தம்பியரைக் கிளையோடும் வேரோடும் களைந்தும், இதுகாறும் போர் புரிய வாராத நீ, இனிப்புரியும் போரும் உண்டோ? இன்னும் கருங்கடல் கடந்து இலங்கை வனத்தில் சிறையிருந்த செல்வியைக் கண்டு அரக்கர் சேனையை அழித்து உன் அருமை மைந்தனை அக்கனை அரை சாய்ந்து போல் தரையில் தேய்த்து இலங்கை மாநகரில் எரியினுக்கிரையாக்கி உன் கண்ணெதிரே மீண்டும் கடலைத்தாவிய அநுமன் பின்னே அமர் செய்யவரும் ஆண்மையற்ற நீ இனிச்செய்யும் அமரும் உண்டோ? இன்னும் உனது ஒற்றழித்து உன் அரசு உரிமையைத் தம்பிக்கு அளித்து, கருங்கடலில் கல்லால் அணை அமைத்து இலங்கையில் வரும்பொழுது அமர் செய்ய ஆண்மையற்ற நீ இனிச்செயும் ஆண்மையுமுண்டோ? உன்னை நயந்த மங்கையர் கண்ணெதிரே மணிமுடி கவர்ந்து மான பங்கம் செய்த வானர வீரன் பின்னே போர் விளைக்க வந்திலாத நீ இனிச்செய்யும் போரும் உண்டோ? கீரிலும் நெருப்பிலும் பாரிலும் வானப்பரப்பிலும் வாழும் உயிரை எல்லாம் வென்றுயர்ந்த நீ அரண் அமைந்த கோட்டையில் அஞ்சி ஒழிப்பது அரும்பழியாகும். ஆதலால் இராமனது தேவியைவிட்டு ஆவியைக் காக்க இசையாயாயின் இப்பொழுதே போருக்கு எழுவாய்" என்று நயம் சான்ற வீர மொழி பகர்கின்றான். இவ்வசை மொழிகேட்ட வீரவேந்தன் வெகுண்டு காவலரை நோக்கி "பற்றுமின் இவனை, பார் மேல் ஏற்றுமின்" என்றலறுகின்றான். அரசனது ஆணையைமேற்கொண்டு தன்னைத் தொடர்ந்து வந்த அரக்கரை அங்கதன் அடித்து மிதித்துச் சிதைக்கின்றான். அப்பால் அந்நகர் கோபுர வாயிலினின்று" நன்மையை நாடும் நல்லோரே, வீரமில்லா எளியோரே, இராமனது சுடுசரம் இந்நகரில் விழப்போகின்றது. அதன் முன்னமே இந்நகரை விட்டு நீங்குமின், நீங்குமின்" என்று கூவுகின்றான். மீண்டும் இலங்கைமா நகரின் எயில்கடந்து இராமனது இணையடியில் வீழ்ந்து "ஐயனே, அம்மூர்க்கன் முடித்தலை அற்றபோதன்றி ஆசையறான்" என்று தூதின் பயனத்தைத்திரட்டி உரைக்கின்றான். அப்பால் இருதிறத்தார்க்கும் இணையற்ற பெரும் போர் தொடங்குகின்றது. ஆகவே அறத்தாறகலாத வீரனது ஆணை தலைக்கொண்டு இலங்கை மன்னனிடம் தூது சென்ற வாலியின் மைந்தனது வீரத்தை ஓர் விழுமிய நாடகமாக அமைத்துத் தந்த கம்பரது கவிநயம் கண்டு களித்தற்குரியதாகும்.

——

சென்னை
## சட்ட சபைத் தேர்தல்.

### வியாபாரிகள் தொகுதி.

கோயம்புத்தூர் முனிஸிபல் வைஸ் சேர்மன் திரு. வி. அருணாசலம் செட்டியார் F. M. U., மேற்படி முனிஸிபல் கவுன்ஸிலரும் மிராசுதாருமான திரு. வி. வி. வி. சுப்பையா செட்டியார், மேற்படி இந்தியன் கமர்ஷியல் பாங் லிமிடெட் செக்ரட்டரி திரு. வி. பழனிசாமி நாயுடுகாரு ஆகிய மூவரும் அடியில் வருமாறு அறிவிக்கின்றனர்:—

சென்னை சட்டசபையில் வியாபாரத் தொகுதிக்கு ஒரு அங்கத்தவராக திரு. வி. வி. வெங்கடரமணய்யங்காரை ஆதரித்து முன் நாங்கள் ஒரு அறிக்கை வெளியிட்டிருந்தோம். வியாபார சமூகத்திலிருந்து வேறு யாரும் இருப்பார்களென அப்பொழுது எங்களுக்குத் தெரியாது. திரு. ஜமால் மகமத் அந்த ஸ்தானத்திற்கு நிற்பதாகத் தெரிகிறது. வியாபாரத் தொகுதிக்குச் சட்டசபையில், ஒய்வெடுத்துக் கொள்ளும் ஒரு வக்கீலை விட ஒரு சிறந்த வியாபார சம்பந்தமுள்ள மனிதர் பிரதிநிதியாக விருப்பது நியாயமாகும். ஆகையால் திரு. ஜமால் மகமதின் சார்பாக விலகிக் கொள்ளும்படி திரு. ஜி. வி. வெங்கடரமணய்யங்காரை அவரது நண்பர்கள் கேட்டுக் கொள்ளுவார்களென நம்புகிறோம். திரு. ஜமால் மகமத் போன்ற ஒரு வியாபாரத் திறனுடையவரை ஆதரிக்காதிருப்பது வியாபார சமூகத்திற்கே கேடு சூழ்வதாகும்.

---

### திருவிதாங்கூருக்குப் புதிய திவான்.

திருவிதாங்கூர் திவான் மிஸ்டர் இ. உவாட்ஸ் வேலையினின்றும் நீங்குவதால், அவருக்குப்பதிலாக திரு. வி. எஸ். சுப்பிரமணிய அய்யர் திவானாக நியமிக்கப்பட்டிருக்கிறார். இவர் இதற்குமுன் திருவனந்தபுரம் ஹைக்கோர்ட்டில் இரண்டு வருடகாலமாக ஜட்ஜ் பதவி வகித்துவந்தார். அதற்குமுன் ஹெட் ஸர்க்கார் வக்கீல்வேலை பார்த்தார்.

---



## நீதிமன்ற நிகழ்ச்சி.

### சென்னை ஹைக்கோர்ட்டு.

#### கோடைகால விடுமுறை.

கோடைகால விடுமுறையை முன்னிட்டு மே மாதம் ௬-ம் தேதி முதல் ஜுலை ௧௬-ம் தேதி முடிய சென்னை ஹைக்கோர்ட் மூடப்படும். அவசர மனுக்களை விசாரிப்பதற்காக ஜஸ்டிஸ் பீஸ்லியும், ஜஸ்டிஸ் அனந்தகிருஷ்ணய்யரும் விடுமுறை ஜட்ஜ்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் மே மாதம் ௭-ம் தேதி முதல் செவ்வாய்க்கிழமை தோறும் விசாரணை நடத்துவார்கள். செவ்வாய்க் கிழமைக்குள் விசாரிக்கப்பட வேண்டிய அவசர மனுக்கள் ஜட்ஜ்களுடைய வீடுகளிலேயே விசாரிக்கப்படும். ஜஸ்டிஸ் பீஸ்லி ஸிவில் மனுக்களையும், ஜஸ்டிஸ் அனந்தகிருஷ்ணய்யர் கிரிமினல் மனுக்களையும் விசாரிப்பார்.

#### கள்ளநோட்டு வழக்கு

(ஜஸ்டிஸ் வாலர், ஜஸ்டிஸ் அனந்த கிருஷ்ணய்யர் முன்பாக.)

#### ஜட்ஜ்களுக்குள் மாறுபாடு.

செப்டம்பர் ௪-ம் தேதி ஜயராம் ஐயர் என்பவர் குற்றாலத்திலிருந்து மாயவரத்திற்குப் பிரயாணஞ் செய்துகொண்டிருக்கும் பொழுது குற்றாலம் ஸ்டேஷன் மாஸ்டரிடம் ஒரு நூறு ரூபாய் நோட்டைக் கொடுத்தார். நோட்டு பொய்யானதெனக் கூறி ஸ்டேஷன் மாஸ்டர் மறுத்துவிட்டார். பின்னர் டி ஐயர் மாயவரம் சிற்றுண்டி சாலை மானேஜரிடம் கொடுத்தார். பின், அங்குள்ள 'புக்கிங் கிளார்'க்கிடமும் கொடுத்தார். இவர்கள் அவரைப் போலீஸாரிடம் ஒப்புவித்தனர். நாகபட்டணம் செஷன்ஸ் ஜட்ஜ் முன்பாக டி ஐயர் மீது பிராது தொடுக்கப்பட்டது. வழக்கு முடிவில் அவர் குற்றவாளியெனத் தீர்ப்புக் கூறப்பட்டு நான்கு வருடக் கடுங்காவல் விதிக்கப்பட்டது. அதன் மேல் ஹைக்கோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ளப் பட்டது. அப்பீல் ஜட்ஜ்கள் இருவரும் வேறுபட்ட முடிவைத் தெரிவித்தனர். குற்றவாளி தெரிந்தே கள்ள நோட்டை மாற்ற முயன்றதாக ஜஸ்டிஸ் வாலர் அபிப்பிராயப்பட்டார். இரண்டு மூன்று பேர் அந்த நோட்டு கள்ள நோட்டு என்று கூறியதாலும், அதற்குமேலும் எதிரி அதை மாற்ற முயன்றதாலும் அவர் குற்றவாளியென ரூபிக்கப்பட்டு விட்டதாகக் கூற முடியாதென ஜஸ்டிஸ் அனந்தகிருஷ்ணய்யர் அபிப்பிராயப்பட்டார், எனவே, வழக்கு மூன்றாவது ஜட்ஜ் ஒருவருக்கு மாற்றப் பட்டது.

#### 'டெய்லி எக்ஸ்பிரஸ்' கம்பெனியை மூடிவிட.

(ஜஸ்டிஸ் ஸர். குமாரசாமி சாஸ்திரி முன்பாக)

'டெய்லி எக்ஸ்பிரஸ்' பத்திரிகையை நடத்தும் மெட்ராஸ் பப்ளிஷிங் கம்பெனி லிமிடெடை மூடிவிட வேண்டுமென கம்பெனி வேலைக்காரர்கள், சார்பாகக் கொடுக்கப்பட்ட மனு ஏப்ரல் ௨௯-ம் தேதி எடுத்துக்கொள்ளப் பட்டது. மானேஜிங் டயரக்டர் மிர். இப்ராஹிம் சேட் சார்பாக திரு. வி. ராதாகிருஷ்ணய்யர் ஆஜராகி ஊழியர்களுக்குக் கொடுக்கவேண்டியது மொத்தம் பதினாயிரம் ரூபாய்தான் வருமென்றும், ஆனால் தம் கட்சிக்காரருக்கே ௩ லட்சரூபாய் கொடுக்கவேண்டி யிருக்கிறதென்றும் ஆகையால் அவரையே 'அபிஷியல் லிக்குடேட்டர்' ராக நியமிக்க வேண்டுமென்றும் மனுக் கொடுத்தார். டயரக்டர்களில் ஒருவரான ஜமால் மகமத் சார்பாகத் தனி 'லிக்குடேட்டர்' ரே நியமிக்கப்பட வேண்டுமென மனுச் செய்துகொள்ளப் பட்டது. ஊழியர்கள் சார்பாகவும் அவ்விதமே கேட்கப் பட்டது. அசோஷியேடட் பிரஸைக்குக் கம்பெனியார் ௩ லட்சம் ரூபாய் கொடுக்க வேண்டுமென்று அபிஷியல் லிக்குடேட்டர் ஜி. ராஜகோபாலன் அறிவித்தார். மனு மாற்றிவைக்கப் பட்டிருக்கிறது.

#### 'பார்வர்டு' வழக்கு.

#### ஒன்றரை லட்சரூபா நஷ்டஈடு.

வேலூர் ரயில்விபத்து சம்பந்தமாக 'பார்வர்டு' பத்திரிகையில் வெளிவந்த கடிதத்தைபெட்டி, மேற்படிப் பத்திரிகைக் கம்பெனி மீது இந்தியா மந்திரியும், ரயில்வேக் கம்பெனியாரும் இரண்டு வழக்குகளைத் தொடர்ந்து ௫ லட்சரூபாய் நஷ்டஈடு கொடுக்கவேண்டுமெனக் கேட்டிருந்தனர். வழக்கை விசாரித்த கல்கத்தா ஹைக்கோர்ட் ஜட்ஜ் மொத்தத்தில் ஒன்றரைலட்சம் ரூபாய் நஷ்டஈடு கொடுக்கும்படி தீர்ப்பளித்திருக்கிறார்.

சமீபத்தில் வெளியான மேற்படிப் பத்திரிகையின் தலையங்கத்தில் அதை உலகத்தில் எந்த சக்தியும் நசுக்க முடியாதென்றும், இன்னும் அதிக சக்தியுடன் நீடித்திருக்குமென்றும் வரையப்பட்டிருக்கிறது.

#### 'நியூ பார்வர்டு'

பார்வர்டு காரியாலயத்திலிருந்து வெளிவரப்போவதாக, 'நியூபார்வர்டு' என்ற பத்திரிகை கல்கத்தா சீப் பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட் முன் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

---

#### கொழும்பு போலீஸ் கோர்ட்டு.

#### சிறுமியை அடித்ததற்கு பதினைந்து ரூபா அபராதம்.

சென்ற சனிக்கிழமையன்று கொழும்பு போலீஸ்கோர்ட்டில், திரு. டாட்வெல் ஹென்றி என்பவர் தன் வேலைக்காரப் பெண்ணான ஒரு அனாதைக் குழந்தையை அடித்ததாக அவர்மீது குற்றஞ் சாட்டப்பட்டிருந்த வழக்கு எடுத்துக்கொள்ளப் பட்டது. மாஜிஸ்திரேட் தீர்ப்புக்கூறும் பொழுது ஒரு பெண்ணைப் பிரம்பால் அடிப்பது தற்காலக் கொள்கைக்கு எதிரான வெறுக்கத்தக்க செயலென்று கூறி எதிரிக்குப் பதினைந்து ரூபாய் அபராதம் விதித்தார்,

#### மருமகளைக் காதலித்தவனுக்குத் தூக்குத்தண்டனை.

அலஹபாத்தைச் சேர்ந்த பிலிஹிட் ஜில்லாவில், ஒரு கிராமத்தில் வசித்தவந்த டில்லா என்பவன் வெளியில் சென்றிருந்த போது, அவனது மனைவியை, அவன் சிற்றப்பன் தீயநடத்தைக்கழைத்தான். அவள் மறுக்கவே கோபமுண்டு, தன்கையிலிருந்த அரிவாளால் அவள் கழுத்தில் வெட்டினான். போலீஸார் அவனைப்பிடித்தனர். வெட்டுண்ட பெண் ஆஸ்பத்திரியிலிறந்தபோனாள். குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது.

---

#### மகாத்மாவுக்கு மான்யம்

ஸ்ரீமான் தட்ல நீலாத்ர ராஜூ கோதாவரி ஜில்லா மட்ல பாலத்தில் மகாத்மா காந்திக்கு ௬௦ ஏக்கர் நிலத்தை மான்யமாகக் கொடுத்திருக்கிறார்.

---

கிராம
### ஊழியர்களுக்குப் பள்ளிக்கூடம்.

மகாத்மாகாந்தி ஸ்தாபித்த தேசிய ஸர்வ கலாசாலைக்கு திரு நாசின்வாஸ் அமுலாக்சே ஒரு லட்ச ரூபாய் நன்கொடை அளித்திருக்கிறார். இத் தொகையைக் கொண்டு கிராம ஊழியர்களுக்கு ஒரு பள்ளிக்கூடத்தை ஏற்படுத்த ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஸர்வ கலாசாலையின் லட்சியங்களையும் கொள்கைகளையும் ஒப்புக்கொண்டு ஸர்வ கலாசாலை அனுப்புமிடத்தில் ஐந்து வருடகாலம் வேலை செய்வதாக ஒப்பந்தம் செய்யும் இளைஞர்கள் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக்கொள்ளப் படுவார்கள். அவர்களுக்கு ௨௦ ரூபாய் வரையில் உபகாரச் சம்பளம் கொடுக்கப் படும். மெட்ரிகுலேஷன் வரையில் படித்தவர்கள் இரண்டு வருஷம் பயிற்சி பெற வேண்டும். பி. ஏ. வரையில் படித்தவர்கள் ஒரு வருஷம் பயிற்சி பெறவேண்டும். படிப்பு முடிந்ததும் ௬௦ ரூ. முதல் ௱ ரூ. வரைச் சம்பளம் கொடுக்கப்படும். குஜராத்தி, பூகோளம், கணக்கு, கணக்கெழுதல், பாட்டு, பஜனை, பொருளாதார சாஸ்திரம், நூற்றல், தச்சுவேலை, சுகாதாரம் முதலியன கற்பிக்கப்படும். ஜூன் ௧௦-ம் தேதி முதல் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப் படுமாம்.

---

### புதுக்கோட்டை-மானாமதுரை ரயில் பாதை.

புதுக்கோட்டை—காரைக்குடி—மானாமதுரை ரயில் பாதை, பொது ஜனப்போக்குவரத்திற்காக ஜூன் மாத மத்தியில் திறக்கப்படுமென்று தெரிகிறதாக சமீபத்தில் வெளியான அசோஷியேடட் பிரஸ் செய்தியொன்று கூறுகிறது.

### ஐ. ஸி. எஸ். பரீட்சை.

சென்ற ஜனவரி மாதத்தில் டில்லியிலும், ரங்கூனிலும் நடைபெற்ற ஐ. ஸி. எஸ். போட்டிப் பரீட்சையில், ஹாபிஸ் அப்துல் மஜீத், பி. எஸ். விஸ்வநாத ஐயர், பி. எம். சுப்பிரமணியம், அபுகாலிக் நாகுயி, ஆர். எல். நரசிம்மன், பிஷன் நாராயண மிச்ரம், ரஞ்சித் குமாராய், ஷியாம்பிகாரி கபூர், அனில்பிகாரி கங்குலி ஆகிய இந்தியர்களும், ஐந்து பர்மியர்களும் தேறியிருக்கிறார்கள்.

### பினாங்கு ஹிந்து சபை விழா.

பினாங்கு ஹிந்து சபையின் ௬௯-வது வருட விழா ஏப்ரல் ௧௩, ௧௪-ம் தேதிகளில் மேற்படி சபைக் கட்டிடத்தில் இந்தியா ஏஜண்டு ராவ் சாகிப் சுப்பையா நாயுடு அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவருக்கு சபையின் சார்பாக ஒரு உபசாரப் பத்திரம் படித்துக் கொடுக்கப்பெற்றது. அன்றிரவு அற்புதானந்த சுவாமிகள் தலைமையில் ஸ்திரீகள் பொதுக் கூட்டமொன்றும் நடைபெற்றது.

---





## மதிப்புரை.

### ஹென்றி போர்டு.

[வெளியிட்டவர்: 'தமிழ்நாடு' லிமிடெட், சேலம் அன் சென்னை. பக்கம்: ௩௦௫, விலை ரூ ௧-அ-௦.]

அமெரிக்கக் கோடீஸ்வரப் பிரபுவும், போர்டு மோட்டார் கம்பெனியின் சொந்தக்காரருமான ஹென்றி போர்டு தம் வாழ்க்கைக் குறிப்புகளைத் தொகுத்து புத்தக வடிவில் வெளியிட்டிருக்கிறார். அந்நூலைத் தமிழில் மொழிபெயர்த்துத் 'தமிழ்நாடு' கம்பெனியார் வெளியிட்டிருக்கின்றனர். தமிழ் நாட்டாருக்கு இது பெரிதும் உபயோகமான நூலாகும். எளிய குடியிற் பிறந்த ஹென்றி போர்டு தன் முயற்சியால் உலகிலேயே ஒப்பற்ற செல்வத்தைப் படைத்து, தொழில் வீரர்களுள் தலை சிறந்து விளங்குகின்றார். தொழிலின்றி, எல்லா சவுகரியத்துக்கும் பிற நாட்டாரையே எதிர் நோக்கி, வேலையில்லாத் திண்டாட்டத்தில் ஆழ்ந்து கிடக்கும் தமிழ்நாடு ஹென்றி போர்டு போன்றாரின் வாழ்க்கையைப் படித்து நன்குணர்ந்து அவரைப் பின்பற்ற முயல்வது அவசியமாகும். இந்நூல் எளிய நடையில் எழுதப்பட்டு சிறந்த முறையில், நல்லதாளில் அச்சிடப் பெற்றிருக்கிறது.

### சுயமரியாதைத் தொண்டன்.

இப்பெயர் தாங்கி பள்ளிபாளையத்தினின்றும் வெளிவரும் வாரப்பத்திரிகையின் முதலிரண்டு மலர்கள் வரப் பெற்றோம். சுயமரியாதை இயக்கத்தை அதிதீவிரமாகப் பரப்பி, மக்களிடையே தோன்றியுள்ள குருட்டு நம்பிக்கைகளையும் மூடப் பழக்கவழக்கங்களையும் வேரறக்கல்லி சமத்வத்தை நிலைநிறுத்த இப்பத்திரிகை பெரிதும் முயலும். இதன் ஆசிரியர் திரு. யஸ். சாமிநாதன் அவர்கள். வருடச் சந்தா ௩ ரூபாய்.

### வேளாளன்.

திரு. மு. பொன்னம்பலம் அவர்களை ஆசிரியராகக்கொண்டு தூத்துக்குடியினின்றும் திகழும் மாதப்பத்திரிகையின் முதலிதழ் கிடைக்கப் பெற்றோம் இது சிறப்பாக வேளாளர் குல முன்னேற்றங்கருதி உழைக்கும். இதன் வருடச் சந்தா ரூபா இரண்டு.

### ஆனந்த ஆசிரியன்.

இப்பெயருடன் ஆரணியில் புதிதாய்த் தோன்றியிருக்கும் மாதப்பத்திரிகையின் முதலிதழ் கிடைக்கப் பெற்றோம். இதன் ஆசிரியர் திரு. V. N. ரங்கசாமி அய்யங்காரவர்கள். கம்பராமாயணக்கதைகள், தற்காலக் கல்வி முறை, தம்பதிகள் கடமை முதலிய பல விஷயங்களடங்கி யிருக்கின்றன. ௩௦ பக்கங்களுடன் திகழும் இப்பத்திரிகைக்கு வருடச் சந்தா ரூபா ஒன்று.

### வியாபாரி.

வியாபாரிகளின் நலன் கருதி திரு. கே. எஸ். சுந்தரம் அவர்களைக் கௌரவ ஆசிரியராகக்கொண்டு இம் மாதப் பத்திரிகை சென்னையினின்றும் வெளிவருகின்றது. இதில் பல வியாபார சம்பந்தமான கட்டுரைகள் வெளிவருகின்றன. இதன் வருடச் சந்தா அணு எட்டு.

---

## காலண்டர் வரவு.

காரைக்குடி, ஹிந்து மதாபிமான சங்கத்தார் வெளியிட்டிருக்கும் அழகிய சுக்கிலவருடக் காலண்டர் கிடைக்கப்பெற்றோம். மாதம் ஒன்றுக்கு ஒவ்வொரு தாள் வீதம் கோர்க்கப் பெற்றிருக்கிறது. ஆங்கிலத் தேதியும் பொறிக்கப் பெற்றிருக்கின்றது. அரசாங்க விடுமுறை நாட்களும், விசேட நாட்களும், நாயன்மார்கள் முதலிய பெரியார்கள் பிறந்த நாட்களும் குறிக்கப் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு தாளிலும் பாரதியார், லாலா லஜபதிராய், மகாத்மாகாந்தி, சுவாமி விவேகானந்தர், கவி தாகூர் போன்ற பெரியார்களின் படங்களுடன் அவர்களுடைய பொன் மொழிகளும் அச்சிடப் பெற்றிருக்கின்றன. எனவே பெரியார்களுடைய பொன்னுரைகளை ஞாபகமூட்டுவது மன்றி அவற்றைப் பாராயணஞ் செய்யவும் இக்காலண்டர் துணைபுரிகின்றது. ஒவ்வொரு தாளும் ஒவ்வொரு வர்ணத்தில் அச்சிடப்பெற்றுப் பொலிவுடன் விளங்குகின்றது.

சேலம், ஷாப் அன் ஜவுளி வியாபாரம் திரு. டி. வி. சென்னி செட்டி அன் சன்ஸ் வெளியிட்டிருக்கும் அழகிய சுக்கிலவருடக் காலண்டர் கிடைக்கப்பெற்றோம். மாதத்திற்கு ஒரு தாள் வீதம் கோர்க்கப் பெற்றிருக்கிறது.

---

## செந்தமிழ்ச் செல்வம்.

நகரச் சிறப்பு.

"வேத வோசையும் வீணையி னோசையும்
சோதிவானவர் தோத்திர வோசையும்
மாதராடல் மணிமுழ வோசையும்
கீத வோசையு மாய்க்கிளர் வுற்றதே

பல்லியங்கள் பரந்த வொலியுடன்
செல்வவீதிச் செழுமணித் தேரொலி
மல்லல்வியானை யொலியுடன் மாவொலி
எல்லையின்றி யெழுந்துள வெங்கணும்

மாடமாளிகை சூளிகை மண்டபங்
கூடசாலைகள் கோபுரந் தெற்றிகள்
நீடுசாளர நீடரங் கெங்கணும்
ஆடல்மாத ரணிசிலம் பார்ப்பன

விளக்கமிக்க கலன்கள் விரவலாற்
றுளக்கில் பேரொலியால் துன்று பண்டங்கள்
வளத்தொடும் பலவாறு மடுத்தலால்
அளக்கர் போன்றன ஆவணவீதிகள்"

—பெரிய புராணம்.

குறிப்பு:—பண்டைநாளில் தமிழ்நாட்டு நகரங்கள் எவ்வாறு அழகுபெற அமைந்திருந்தன என்பதற்கு இப்பாடல்கள் சான்று தருகின்றன சேக்கிழார் காலத்தில் மக்கள் சமயத்தின் பெயரால் இன்ப வாழ்வினை வெறுத்து விலக்கினாரில்லை. சங்கீதம், சிற்பம் ஆகிய அழகுக் கலைகள் மோட்ச லோகத்தின் கதவுகளை அடைத்துவிடும் என்று அன்னார் கருதவில்லை. தொண்டர்கள் சமய நூல்களை ஓதிவந்ததோடு, வாழ்க்கையை அழகு செய்யும் இசை, கவிதை, சிற்பம் ஆகிய இன்பக்கலைகளிலும் இறைபொலி கண்டனர்; இறையின்பம் கண்டனர். மறு உலகமே இறையுலகம், இவ்வுலகம் இறையுலகமன்றுஎன்று கருதி உலகவாழ்வை இகழும் வழக்கம் அந்நாளில் மக்களுள் பெரிதும் பரவியிராததால் தமிழர் சேக்கிழார் காலத்திலும் வாணிபத்திறனுடையரா யிருந்தனர். கண்விருந்தான சிற்பச் செல்வமும், செவி விருந்தான இசைச் செல்வமும், பொருட் செல்வத் தோடும் அருட்செல்வத் தோடும் கலந்து காணப்படுவது ஆனந்தமே யன்றோ?

(௧௭) —தமிழ்த் தொண்டன்.

---

### ௨௦ வயது மாணவன் ௨௨௦ ராத்தல் எடையைத் தூக்கினான்.

இந்து சமாஜ சம்மேளனத்தில் நடைபெற்ற உடற் பயிற்சிக் காட்சியில், சத்திபபாத பாட்டாசார்ஜியா என்னும் ௨௦ வயது மாணவன் ௨௨௦ ராத்தல் எடையை உயர்த்தி முதலாவது பரிசு பெற்றான்.

### முடியால் உயர்த்தல்.

மேற்படி காட்சியில், தலை மயிரால் சுமார் ௪ மணங்கு பாரத்தை மோனிந்திர என்பவர் தூக்கிப் பரிசு பெற்றார்.

### தூரதிருஷ்டிக் கண்ணாடிகள்.

கூடிய சீக்கிரம் ரோம் நகரில் பெரிய வான சாஸ்திர ஆராய்ச்சிக் கூடம் ஒன்று அமைக்கப்படும் எனத் தெரிகிறது. அது வகைக்கு இருபத்தைந்தரை அங்குல குறுக்களவுள்ள ஒரு தூரதிருஷ்டிக் கண்ணாடியைச் செய்து கொடுக்க ஒரு ஜர்மன் தொழிற்சாலை ஒப்புக்கொண்டிருக்கிறது. மேரியோ மலைச் சிகரத்தில் அது கட்டப்படும். ரோம் நகரின் எப் பாகத்திலிருந்து நோக்கினும் அது நன்கு விளங்கும்.

சமீபத்தில் உலகின் பல பாகங்களிலும் அமைக்கப்பட்ட பெரிய தூரதிருஷ்டிக் கண்ணாடிகளில் தென் ஆப்ரிக்கா புளும் பவுண்டனில் உள்ள இருபத்தேழு அங்குலக் கண்ணாடியும், ஜோஹன்னஸ்பர்க்கில் அமைக்கப் பெற்ற இருபத்தாறரை அங்குலக் கண்ணாடியும், ஏல் யூனிவர்ஸிடியின் இருபத்தாறு அங்குலக் கண்ணாடியும், பெரியவை. உலகிலேயே மிகப் பெரிய தூர திருஷ்டிக் கண்ணாடி சிக்காகோ யூனிவர்ஸிடியைச் சேர்ந்த எர்க்ஸ் அப்ஸர்வெட்டரியி லிருக்கின்றது. அதன் குறுக்களவு நாற்பது அங்குலம்.

---

### முதலாவது ராஜஸ்தான ஸ்திரீ டாக்டர்.

பெண்கள் கல்வி கற்பதற்குத் தனி நிலையமொன்றுமில்லாத ராஜபுதனத்திலுள்ள ௪௮ லட்சம் பெண்களிலும் மிஸ். பி. காஹலட் என்ற மார்வாரி பெண் முதன் முதல் சப் அஸிஸ்டெண்ட் ஸர்ஜன் பரீட்சையில் இவ்வருடம் தேறியிருக்கிறார். ஜோத்பூர் பெண்கள் ஆஸ்பத்திரியில் அவர் ஒரு பெண் டாக்டராக நியமிக்கப் பட்டிருக்கிறார்.

## பல திரட்டு.

சாதாரண மனித உரிமைகளைக் கூட நாம் கோடிக்கணக்கான தாழ்த்தப்பட்ட சகோதரர்களுக்குக் கொடுக்க இன்னும் தயாராயில்லை. இப் பூமியிலேயே, இவ்விதம் தம்மைத் தாமே இழிவு படுத்தும் மனிதர் இந்துக்கள் மட்டும் தான்.

—பாப் பரமானந்தர்.

சுய நலமே உண்மையான நாஸ்திகம்; தன்னல மற்ற தன்மை; உண்மையை விரும்பி உழைத்தல் இது தான் உண்மையானமதம்

—லாக்கில்.

பிறப்பில் உயர்வு தாழ்வு கருதும் ஒரு நாடு தன்னாசை இழத்தல் இயல்பே. எல்லோரையுஞ் சமமாகப் படைக்கும் ஆண்டவன் நோக்குக்கு மாறுபட்டு நடப்பவர் ஒடுக்கப் படுதலும் இயல்பு. தன் வினை தன்னைச் சுடாது மற்றெவரைச் சுடும்?

—திரு. வி. கலியாணசுந்தரர்.

---

### இந்தியர் ஜனத்தொகை.

மொத்த ஜனத்தொகை ௩௧ கோடி அ௯ லட்சம், நகர வாசிகள் ௩ கோடி ௨௪ லட்சம். கிராம வாசிகள் ௨அ கோடி ௯௪ லட்சம்.

நூற்றுக்குத் தொண்ணூறு பேர் கிராமங்களிலேயே வசிக்கின்றனர்.

### தினசரி வரும்படி.

தினந்தோறும் ஒவ்வொரு தேசவாசிக்கும் சராசரி வரும்படி விகிதம் வருமாறு:—

| | |
|---|---|
| அமெரிக்கா | ரூ. ௩. |
| ஆஸ்திரேலியா | ,, ௨—௪—௦ |
| கிரேட் பிரிட்டன் | ,, ௨—௩—௪ |
| கனடா | ,, ௧—௧௦—அ |
| இந்தியா | ,, ௦—௧—௭ |

### வருடச் செலவு.

இந்தியாவில் இறக்குமதி யாகும் துணிக்கும் நூலுக்குமாக வருடந்தோறும் ௬௬ கோடி ரூபாய்க்கு மேல் செலவாகிறது. சென்ற பத்து வருடங்களில் பிரிட்டன், ஜப்பான் முதலிய அன்னிய நாடுகளிலுள்ள பஞ்சு வியாபாரிகளுக்கு ௬௬௬ கோடி ரூபாய் இந்தியா கொடுத்திருக்கின்றது. எனினும் ௧௯௨௦-௨௧-ம் வருடத்தில் ௬௭௧௬ லட்சம் ரூபாய்க்கு இறக்குமதி செய்யப்பட்டது. ௧௯௨௭-௨அ-ல் ௬,௧௧௨ லட்சமாகக் குறைந்திருக்கிறது.

### அமெரிக்க குடியரசுத் தலைவர்.

அமெரிக்கஐக்கிய மாகாணங்களுக்கு ஒரு பிரஸிடெண்டைத் தேர்ந்தெடுக்க நாற்பது அல்லது ஐம்பது லட்சம் டாலர்கள் செலவாகின்றன. அவருக்கு ஒரு வருடத்திற்கு எழுபத்தையாயிரம் டாலர்கள் சம்பளமாகக் கொடுக்கப்படுகிறது. பிரயாணம்,தமாஷா முதலியவற்றிற்காக இருபத்தையாயிரம் டாலர்கள் செலவிடப் படுகின்றன. இன்னும் சௌகரியங்களுடனும் கூடிய மாளிகை யொன்றும் கொடுக்கப் படுகின்றது. இருபதுக்கு மைபாதபடி வேலையாட்கள் அதில் இருக்கின்றனர். ஏராளமான மோட்டார் வண்டிகள் கொடுக்கப் படுகின்றன. ஒருடஜன் ரகசிய காப்பாளரும், முப்பது வெள்ளையப்பப் போலீஸாரும் அவரைப் பாதுகாக்கின்றனர். இவை யெல்லாம் சேர்ந்து வருடத்துக்கு அவருக்காக ஐந்து லட்சத்துக்கு மேல் செலவாகிறது.

---

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தில் நாற்பது நிமிடங்களுக்கொரு தடவை ஒரு கொலை நடக்கிறதாம்.

# நமசிவாயத் தமிழ்த் தருமப் பாடசாலை, கோலப்பிறை.

ஸ்தாபனம்-௧௯௨௬-ம் ஆண்டு.

## விஞ்ஞாபனம்.

இம் மலாய்நாட்டில் வசிக்கும் எனது அன்பார்ந்த சகோதர சகோதரிகட்கு எனது வணக்கம் உரித்தாகுக

ஒருதேசம் முன்னேற்றமடையவேண்டுமானால், அந்நாட்டிலுள்ள மக்கள் ஒற்றுமையாக வாழவேண்டும். அவ்வொற்றுமைக்கு அடிப்படையானது அறிவு வளர்ச்சி. அவ்வறிவு வளர்ச்சியைத் தூண்டக்கூடியது கல்வி. அதிலும், அவரவர்கட்கு அன்னவர்களுடைய தாய்மொழியே பிரதானம். தாய்மொழிப் பற்றே தேசப் பற்றிற்கு ஆதாரம். இஃதில்லாவிட்டால் சமூகக் கூட்டுறவுமில்லை; மதமுமில்லை; பேச்சினில் இன்பமுமில்லையென்றே சொல்லலாம். இப்பொழுது நமக்கு வேண்டுவது என்ன? நந்தாய் மொழியாகிய தமிழே! தமிழ் என்பதற்கு "இனிமை" என்பது பொருள். இப் பொருள் தோன்றவே புலவர் திலகரான கம்பநாட்டாரும் தமது இராமாயணத்தில் "தமிழ்ப்பாட்டிசைக்கும் தாமரையே", என்று கூறியிருக்கிறார். தமிழ் மொழிக்குச் சமமான மொழி இனிமையில் வேறு கிடையாதென்றே கூசாது சொல்லலாம். இதைப் பற்றியே காலஞ்சென்ற கவிச் சக்ரவர்த்தியாகிய ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் அவர்களும் "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்" என்றுசொல்லியுள்ளார். இப்பேர்க்கொத்த அமிழ்தினும் இனியதமிழ்மொழியை மலாய்நாட்டில் நம்சமூகத்தாருக்கும் நம் குழந்தைகளுக்கும் புகட்டவேண்டுவது நமது கடனன்றோ! "க்ஷேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ்முழக்கம் செழிக்கச்செய்வீர்." நிற்க, ஆங்கிலம் கற்றுத்தேர்ந்த ஒரு தமிழன் எனக்குத் தமிழ் எழுதப் படிக்கத் தெரியாதென்றால், பிற ஜாதியார் நம்மை நகைக்க மாட்டார்களா? சீனர்கள் தங்களுடைய தாய்பாஷையை விர்த்திக்குக் கொண்டுவர எவ்வளவோ முயற்சி செய்கிறார்கள். அதற்கெனப் பலர் பாடசாலைகளும் கட்டி குழந்தைகளை இலவசமாக வாசிக்கச் செய்கிறார்கள். அனேகமாக இம் மலாயாவில் அன்னவர்களுடைய பாடசாலை இல்லாத இடமே கிடையாது. இவற்றை உத்தேசித்தே அடியேன் கடவுளுடைய உதவியால், சென்ற மூன்றுவருடங்களாக இப் "பிராவின்ஸ் வெல்லெஸ்லி" மாகாணத்தின் தலைநகராகிய "பட்டர்வொர்த்" தில் ஷை பாடசாலையை நடத்திவருகிறது எல்லோருக்குந் தெரிந்த விஷயமே. தற்பொழுது இரண்டு ஆசிரியர்களும், ஒரு ஆசிரியையும் வேலை செய்து வருகிறார்கள். மாணவ மாணவிகளின் எண்ணிக்கை எண்பதுக்குமேல். ஆங்கில கலாசாலையில் வசிக்கும் மாணவர்கட்கு இராப் பள்ளிக்கூடம் வைத்துத் தமிழ்ப் போதிக்க உத்தேசம். பள்ளிக்கூடத்தில் புத்தகசாலை ஒன்று இருக்கிறது. சுமார் முன்னூறு புத்தகங்கட்கு மேல் இருக்கின்றன. வர்த்தமானப் பத்திரிகைகளும் உண்டு. பல அன்பர்களும் வாசித்துப் பயனடைந்து வருகிறார்கள்.

கட்டிடம் உள்பட இதுவரைச் செலவானது $ ௩௪௯-௩௫ காசு. இப் பாடசாலையானது தழைத்தோங்கும்படி செய்ய ஓர் க்ஷேமநிதி ஏற்படுத்தியிருக்கிறோம். அதற்கென நம் பாடசாலையின் தலைமை உபாத்தியாயர், திரு செ. ராஜகோபாலன் அவர்கள் மலேயாவில் சுற்றுப் பிரயாணம் செய்துவருகிறார். அன்னவர் கோரிவருங் காரியங்களுக்கு அன்பர்கள்தாராளமாய்ப் பொருள் உதவிசெய்து, "அன்னயாவினும் புண்ணியங்கோடி ஆங்கோர் ஏழைக் கெழுத்தறிவித்தல்" என்றபடி எல்லா தர்மத்திலும் சிறந்த தர்மமாகிய கல்வித் தர்மத்தைப் பங்கிட்டுக்கொள்ளும்படி தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக! சுபம்!!

இங்ஙனம்,

**கா. நமசிவாயம்,**

பரிபாலகன்.



## கோயிற் பெருச்சாளிகள்.

கோயிற் பெருச்சாளிகள் என்றால் கோயில்களிலேயே இருந்து அச்சொத்தைத் தின்று கொழுத்துப் போயிருக்கும். அதற்குக் கோயிற் சோறு சுண்டற்கடலை வடை யெல்லாம் தனக்காகவே செய்யப்படுகிறதென்று தோன்றும். கோயிலைப்பற்றியும் சாமியைப் பற்றியும் நிவேத்தியம் செய்பவர்களைப்பற்றியும்பெருச்சாளிக்குக் கவலை கிடையாது கோயில்களில் இம்மாதிரி எலி வம்சத்தில் பிறந்த பெருச்சாளிகளைத் தவிர மனித வகுப்பில் பிறந்த பெரும் பெருச்சாளிகளும் உண்டு. இவைகட்கு வேறு கதி கிடையாது. கோயில்களையும் மடங்களையும் காத்துக் கொண்டு கிடக்கும். சோறும் சுண்டற் கடலையும் வழக்கும் பித்தலாட்டமுந் தான் இவற்றிற்கு நோக்கம். இந்தப் பெருச்சாளிகளில் பரம்பரையாகக் கோயில் சொத்தில் வாய் வைத்து வருகிற பெருச்சாளிகளும் உண்டு. நெடுங்காலத்துப் பெருச்சாளிகளாக இருப்பதால் மற்றவர்கள் இவற்றை வெளியே துரத்த வேண்டாமென்று நினைக்கிறார்கள். இதனால் தான் இவை காலங்கழித்து வருகின்றன. இவை செய்யும் அநியாயங்களைப் பார்த்து இவற்றைத் தொலைக்க வேண்டுமென்றால் இவை கடிக்க வருவதும் இயல்பு. இப்பெருச்சாளிகள் மடைப்பள்ளிப் பக்கமாக ஊசற்பொருக்கு பொறுக்கிக் கொண்டு திரியாமல் நல்ல கூட்டங்களிலும் நடுவே இருந்து சத்தம் போடவும் துவங்குவது தான் மானக்கேடாக இருக்கிறது. இவற்றின் குணத்தைக் கண்டு ஓரிடத்தில் உதைத்துவிட்டினால் இன்னோரிடத்தில் போய் பதுங்குகின்றன. காசியிலிருந்து விரட்டினால் கயாவுக்குப் போகிறது. காரைக்குடியிலிருந்து விரட்டினால் இளையாற்றங்குடிக்குப் போகிறது. அங்கிருந்து விரட்டினால் மடத்துக்குப் போகும். ஏதாவது ஊசிப்போன சர்க்கரைப் பொங்கலுக்கு அர்த்தசாமம் வரை காத்திருக்கும் கோவிலைச் சாத்தினால் மேளகார வீட்டில் பதுங்கும். இப்படிப்பட்ட பெருச்சாளியின் உபத்திரவத்தைக் கண்டு செருப்பாலடித்தாலும் புத்தி வருகிறதில்லை. இப்படிப்பட்ட பெருச்சாளிகள் பொதுவாக எல்லாக் கோவில்களிலுமிருப்பதால் ஒவ்வொரு கோவிலாரும் உஷாராக இருக்க வேண்டும். கழிபட்ட பெருச்சாளிகள் கோவிலுக்கு அவசியமில்லை. அவைகளை உதைத்து வெளியில் விரட்டுவதே சரி. இல்லாவிட்டால் மற்றவர் பேருங் கெட்டு விடுவது திண்ணம்.

—'அஞ்சா நெஞ்சன்'.

---

### சென்னை.

பங்குதாரர்கள் வருடக்கூட்டம்:— விட்டில்ஸ் ஓரியன்றல் பாம் அன் பார்மாட்டிகல்ஸ் லிமிட்டெடின் எட்டாவது பங்குதாரர்கள் கூட்டம் ஏப்ரல் ௧௯-ம் தேதி நடைபெற்றது. டிஸம்பர் ௩௧-ம் தேதியோடு முடிவான வருடத்திய கணக்குகள் பரிசீலனை செய்யப்பட்டு முடிவு செய்யப்பட்டன. கம்பெனியின் அபிவிருத்தியைப் பாராட்டி சேர்மன் திரு. F. ஹாவர்டெக்வி பேசினார். இவ்வருடத்தில் நூற்றுக்குப் பன்னிரண்டு வீதம் டிவிடெண்டு ஏற்படுகிறது. இதில் நூற்றுக்கு ஐந்து வீதம் கொடுப்பதென டயரக்டர்கள் சிபார்சு செய்தபடி ஊர்ஜிதம் செய்யப்பட்டது. சென்ற அக்டோபர் மாதத்தில் கொடுக்கப்பட்ட டிவிடெண்டுடன் சேர்ந்து மொத்தம் நூற்றுக்குப்பத்தாகிறது. இது போக ௨௦,000 ரூபாய் சேம நிதிக்காக ஒதுக்கி வைக்கப்படும். ௨000 ரூபாய் போனஸ், பிராவிடெண்டு நிதிக்காக ஒதுக்கி வைக்கப்படும். இத்தீர்மானங்களுடன் கூட்டம் முடிவுற்றது.

---

## பெண் மக்கள் பகுதி.

விதவை மணத்திற்கு மகாத்மாவின் ஆதரவு.

### ஒரு இளைஞருக்கு மகாத்மாவின் புத்திமதி.

'நவஜீவன்' பத்திரிகையில் மகாத்மா காந்தி எழுதியிருப்பது வருமாறு:-

"இவ்வருடமே எனக்கு விவாகம் நடைபெற வேண்டுமென்றும், இவ்விஷயத்தில்நான் அவர்கள் விருப்பப்படியே நடக்க வேண்டுமென்றும், எனது தாய் தந்தையர் விரும்புகிறார்கள். பதிலுக்குப் பெண் கொடுத்தாலொழிய எங்கள் சமூகத்தில் ஒரு பெண்ணை விவாகஞ் செய்ய முடியாது. இளமை மணம் எங்கள் சமூகத்தில் கட்டாயமாகவே இருக்கின்றது. ஒன்பது அல்லது பத்துவயதில் இரண்டு பெண்கள் இருக்கின்றார்கள். பெண் கொடுத்துப் பெண் வாங்கும் நிபந்தனைக்குக் கட்டுப்பட்டால் தான் இப் பெண்களும் கிடைக்கும். இவ்வருடத்தில் இச் சந்தர்ப்பத்தை நழுவவிட்டால் இனி இப் பெண்கள் கிடைப்பதும் அரிது என எனது தகப்பனார் கூறுகின்றார். இதை மறுத்தால், எனது தாயார் அழத்தொடங்குகிறாள். ஆனதால் குடும்பத்தில் பலவித சங்கடங்கள் நேரிடுகின்றன. நான் இருபத்திரண்டு வயதுடைய பட்டிதார் இளைஞன். ஒரு விதவையையோ அல்லது அன்னியஜாதிப் பெண்ணையோ கல்யாணஞ் செய்துகொள்ள எனதுபெற்றோர் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இந்நிலைமையில் நான்என்னசெய்வது?" என ஒரு பட்டிதார் இளைஞர் எழுதுகிறார்.

இந்தப் பட்டிதார் இளைஞரைப் போல இன்னும் பலருங் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதை நான் அறிவேன். நமது சாஸ்திரங்களின்படி, பதினாறு வயதும் அதற்கு மேலுமாகிய பையனைப் பெற்றோர் ஒரு நண்பனாகக் கருதவேண்டுமேயன்றி, தங்கள் அதிகாரத்துக் குட்பட்ட பையனெனக் கருதக்கூடாது. ஆனால் நம் நாட்டிலுள்ள சில தாய்தந்தையர் வயதுவந்த தங்கள் பிள்ளைகளும் சகல விஷயங்களிலும் தங்கள் விருப்பப்படியே நடக்கவேண்டுமென்றும், அதிலும் கல்யாணம் போன்ற விஷயங்களில் பிள்ளைகளுக்குச் சொந்த புத்தியேயில்லையென்றும் நினைக்கிறார்கள். ஆண்மக்கள் விஷயமே இப்படியானால் பெண் குழந்தைகள் விஷயத்தை நன்கு ஊகித்துக் கொள்ளலாம். இந்தவிதமான விஷயங்களில் தாய்தந்தையரின் கோபத்தை இளைஞர்களும் இளம் பெண்களும் கவனியாதிருப்பது நியாயமும், மதக் கடமையுமாகுமென எனக்குத் தோன்றுகிறது. வயதுவந்த ஒரு இளைஞனோ, பெண்ணோ ஒரு நியாயமான சரியான வழியை உறுதியாகக் கடைப்பிடித்தால், பெற்றோர்களால் எவ்வித தடையும் உண்டாவதில்லையென்பது எனதனுபவ உண்மை. தங்கள் மக்களுடைய உறுதியை மாற்றமுடியாதெனக் கண்டவுடன் அவர்களும் உடன்பட்டு விடுவார்கள். ஏனென்றால் பிள்ளைகள் தங்கள் விருப்பத்திற்கு மாறாக நடந்தாலும் முடிவில் தங்கள் விருப்பத்திற்கு இணங்கி விடுவார்களென்ற நம்பிக்கை பெற்றோர்கள் மனத்தில் சதா இருக்கிறது. இந்நம்பிக்கை பயனற்றுப் போய்விடுமாயின் இனி நிர்ப்பந்தப் படுத்துவதாலும் ஒன்றும் நேராதெனக் கண்டு அவர்கள் விட்டுவிடுவார்கள். ஆகையால், ஒரு இளம்பெண்ணை மணத்தல், பெண்கொடுத்துப் பெண்ணெடுத்தல் ஆகிய இரண்டு பாவச் செயல்களையும் செய்யாதிருக்கும்படி இந்த இளைஞருக்குப் புத்திமதி கூறுகிறேன். தாய் தந்தையருடைய விருப்பத்திற்கிசைய மறுப்பதால் குடும்பத்தில் எவ்வளவு கஷ்டம் வந்தாலும் கவனிக்கக் கூடாது தனது ஜாதிக்குப் புறம்பான வகுப்பிலோ அல்லது விதவையையோ விவாகஞ் செய்வது சிறப்பான குணமென்பதை அவர் உணரவேண்டும்.

---

### ஓர் இளைஞனின் தற்கொலை.

மறுமணம்செய்ய மனைவிக்குஅனுமதி.

பம்பாய் ஏப்ரல் ௨௪-௨

௨௧ வயதுள்ள ஒரு மாணவர் சென்ற திங்கட்கிழமை இரவு தண்டவாளத்தில் படுத்துத் தற்கொலை செய்துகொண்டார். அவர் மடியிலிருந்த கடிதத்தில் அடியில் வருமாறு வரையப்பட்டிருந்தது:—

என்னாலியன்ற அளவு முயற்சிசெய்தும் வெற்றிபெற முடியவில்லை. எனது தாய்தந்தையர் முன் செல்ல தைரியமில்லை என் மனைவி மறுவிவாகஞ் செய்துகொள்ள அனுமதிக்கப்படுவதே எனது விருப்பம்.

### மார்வாரி குடும்பத்தில் முதல் விதவா விவாகம்.

ஆயிரம் பேர் முன்னிலையில் நடைபெற்றது

வார்டா, ஏப், ௨௩.—

நேற்றிரவு லட்சுமி நாராயண கோவிலில் மார்வாரி கௌடு பார்ப்பன சமூகத்தில் முதன் முதல் ஒரு விதவா விவாகம் நடைபெற்றது. இவ்வூர் நார்மன் ஸ்கூல் உபாத்தியாயராகிய ராமச்சந்திரஜி சரன் என்பவர் ௨௦-வயதுள்ள ராம்பியாரிபாய் என்னும் மாதை மணம் செய்து கொண்டார். இவ்விவாகத்தை மகாத்மா ஸ்ரீதார் விஷ்ணு பாஞ்ச்பே வேத முறைப்படி முடித்து வைத்தார். ஆயிரம் பேர்கள் விஜயஞ் செய்திருந்தனர். மணம் நிறைவேறியதும், விதவா விவாகத்தின் முக்கியத்தைப்பற்றிப் பண்டித ராமச்சந்திர ஜியும், மகாத்மா பாஞ்சையும் பிரசங்கித்தார்கள். மார்வாரி சமூகத்தைச் சேர்ந்த பிரபலஸ்தர்கள் பலரும், சனாதன தர்மிகளும், பெண்களும் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

### நாகபுரியில் கலப்பு விவாகம்.

டாக்டர் ஹரிஸிங் கோரின் புத்திரி பிரபாவுக்கும் பொர் லெப்டினன்ட் ஹாரிகிஷன் ஸிங்குக்கும் ஏப்ரல் ௨௮-ம் தேதி விவாகச் சட்டப்படி திருமணம் நடைபெற்றது. இம்மணத்தால் ராஜபுத்திர வகுப்புக்கும் சீக்கிய வகுப்புக்கும் சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறது.

### ஸபர்மதி ஆசிரமத்தில் கலப்பு விவாகம்.

ஆசார சீர்திருத்தத்தை அமுலுக்குக் கொண்டுவரும் நோக்கத்துடன், ஸபர்மதி ஆசிரமத்தில், வைசிய வகுப்பில் ஒரு கலப்பு விவாகம் நடத்த மகாத்மா காந்தியும், ஸேத் ஜம்னாலால் பஜாஜும் ஏற்பாடு செய்திருக்கின்றனர். இதன்படி, காலஞ்சென்ற மகன்லால் காந்தியின் மகள் (௧௮-வயது)

## இவர்களுக்கென்ன ஆத்திரம்?

யாரோ ஒருவர் 'குமரன்' பத்திரிகையில் பெண் தேவை என்று விளம்பரம் போட்டார். எல்லாக் கோவிலாருக்கும் எல்லா ஊருக்கும் அந்தப் பத்திரிகை போகிறது. இதில் இளையாற்றங்குடியில் வந்திருந்தவர்களுக்கு என்ன அக்கறை? இல்லாவிட்டால் இந்தக் கோவிலைப் பொறுத்தமட்டிலாவது ஏதாவது செய்திருக்கலாம் அப்படியுமல்லாமல் எல்லாக் கோவிலாரையும் உஷாராக இருங்கள் என்று இவர்கள் ஓலை எழுதுவது முறையாகுமா? மற்றக் கோவிலார் எல்லாரும் தூங்குகிறவர்களென்றும் இவர்கள் விழித்துக்கொண்டிருக்கிறவர்களென்றுமல்லவா ஆகிறது? தவிர மற்ற எட்டுக் கோவில் நகரத்தாரையும் உஷாராக இருக்கும்படி இவர்கள் கூறவேண்டிய காரணமென்ன? உஷாராக மற்றவர்கள் இல்லையென்பதை இவர்களெப்படிக் கண்டனர்? உஷாராக இல்லாவிட்டாலும் இவர்களைத் தூங்கும்படி யார் கேட்டுக்கொண்டார்கள்? இளையாற்றக்குடியில் கூடிய இந்தக்கூட்டம் பள்ளிக்கூட்டமல்லவாதலால் இதைப் பற்றி அதிகமாகக்கவலைப்படவேண்டியதில்லை. ஆனால், இனிமேலும் பத்திருபது பேராகச் சேர்ந்துகொண்டு மற்றகோவில் நகரத்தாருக்கு உஷார் கொடுக்காமலிருக்கும்படி இந்த வேலைக்கு முன்நின்றவர்களை அடக்க வேண்டுவது மற்ற கோவில் நகரத்தார் கடமையாகும். தொண்ணூற்றுநாலு நகரத்தாரும் இதைப்பற்றியோசித்துக் கோயிலூரில் கூட்டங்கூடி பெரிய மனுஷியாகாத பெண் விதவைகட்கும் குழந்தை பிறவாத பெண் விதவைகட்கும் கல்யாணஞ் செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். முந்தின கூட்டத்திலேயே பலர் இதைப்பற்றிப்பேசினார்கள்.

—"உஷாராக இருப்பவன்"

---

ஸ்ரீமதி குமாரி ருக்மணி தேவிக்கும், ராணி கஞ்ச ஸ்ரீமான் ராமேஸ்வரலால் பஜாஜின் மகன் (௨௪-வயது), ஸ்ரீமான் பன்வாரிலால் பஜாஜிற்கும் விவாகம் நடைபெறும்.

---

## ரயில்வே வழக்கு.

ஸர்க்கார் சிங்காரவேலுக்கு ௧௦ வருடக் கடுங்காவல்.

ஏப்ரல் ௨௪-ம் தேதி திருச்சி ரயில்வே வழக்கில் தீர்ப்புக்கூறப்பட்டது.

திருவாளர்கள் முகுந்தலால் ஸர்க்கார், சிங்காரவேலுச் செட்டியார், டி. கிருஷ்ணஸ்வாமிப்பிள்ளை, டி. வி. கே. நாயுடு உள்பட ௯ எதிரிகளுக்கு இ. பி. கோ. ௧௨௦ பி. ரயில்வே சட்டம் ௧௨௬, ௧௨௮-ம் பிரிவுகளின்படி தலைக்குப் பத்து வருடக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. டிரைவர்கள் பெரியநாயகம் நாராயணஸ்வாமி நாயுடு, எஸ். கிருஷ்ணமாச்சாரி ஆகிய மூவரும் விடுவிக்கப்பட்டனர்.

---

### கும்பாபிஷேகம்.

கோவிலூர் ஆதீனத்தைச் சேர்ந்த பொருள் வைத்த சேரிமடாலயம் சிக்கல் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சௌந்தரிய நாயகி அம்பா சமேத சுவர்ணபுரீசுவர சுவாமிக்கு வைகாசி ௯-ம் தேதி பகல் ௧௨-மணிக்கு மேல் ௨ மணிக்குள் அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேகம் நடைபெறுமென்றும், அன்றிரவு பஞ்சமூர்த்திகளும் திருவுலாக் கொண்டெழுந்தருளுவார்களென்றும் அறிவிக்கப்படுகிறது.

காளென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தாலங்காரம்.

குமரன், காரைக்குடி
சுக்கில-ஞு சித்திரை-மீ உ0-உ

## விடுதலை.

தமிழக மக்களின் இன்றைய வாழ்வினை நோக்கும் போது எவருக்கும் பெருவருத்தமுண்டாகுமென்பதி லையமில்லை. சமூகக் கட்டுப்பாட்டினுல் ஏற்படும் பெருந் துயரங்களில் முதன்மை பெற்று விளங்குவது சடங்குகளினுலேற்படுங் கொடுந் துயரமாகும். எந்த சமூகமும் சடங்குகட்கு ஆட்பட்டு உயிருடன் சாவதைக் காண்கிறோம். கல்யாணம் முதலிய விசேடங்களும் அக்காலத்தில் செய்யவேண்டி யிருக்கும் சடங்குகளும் அதன் பொருட்டுச் செலவிடும் பொருளும் சேர்ந்து மக்கட்குக் கொடுக்கும் துயரம் கொஞ்சமன்று. இவற்றை யொழிக்கப் பெரும்பாலாக யாவரும் விரும்புகின்றனர். என்றுலும் இவைகளை விட முடியாதபடி மேலும் மேலும் வளர்ந்தோங்கச் செய்வது ஜாதி சமயமெனும் இரண்டு பெரும் கட்டுப்பாடாகும். இவ்விரண்டு கட்டினையும் தளர்த்துதற்குப் பெரும்பாடுபட்டாக வேண்டி யிருக்கிறது. ஜாதி சமயக் கட்டுப்பாட்டினுல் மக்கள் படுந் துயரத்தை உணர்வார் பலராவார். என்றுலும் செக்கில் பூட்டப்பட்ட காளைகளைப் போல விலகி ஓட முடியாமல் சுற்றிச் சுற்றி வரவேண்டியிருக்கிறது. காளைகள் எவ்வளவு பலமும் ஓட்டமும் உடையனவா யிருப்பினும் பூட்டப் பட்டிருப்பது செக்கின் நுகமாதலால் சுற்றிச் சுற்றி வரவேண்டியதைத் தவிர வேறு கதியில்லை. இம்மாதிரியாகவே ஜாதிக்கட்டும் சமயக்கட்டும் மக்களை விலகவொட்டாமல் வதைத்து வருகின்றன. வட நாட்டார் ஆண்டுள்ள சமய சந்தர்ப்பங்கட்குத் தக்கவாறு திருத்தமுற முயன்றனர். ஒருவாறு வெற்றியும் பெற்றன ரென்னலாம். ஜாதிச் சடங்குகளையும் சமயச் சடங்குகளையும் ஒரே படியாக உடைத் தெறியாதவரை மக்கள் நல்ல வாழ்வு வாழ முடியாதென்பதை அனுபவத்தில் கண்ட பெரியாராய ராஜாராம் மோகனராய் பிரம சமாஜத்தைக் கண்டார். அறிவாளிகள் அதிற் கலந்தனர். புதிய வகையில் அச் சங்கம் நல்ல வேலை செய்தது. அதனிடத்துப் பல பேரறிஞர் தோன்றி யிருப்பது கண்கூடாகும். இப்படியே தயானந்தால் ஆரிய சமாஜங் காணப் பட்டது. இம் மாதிரியான நல் லியக்கமொன்று தமிழகத்தில் தோன்றவில்லை. அழுக்குச் சுவடிகளும் வயிறு பெருத்த சாத்திரிகளும் முழு மூடச் சைவ சிகாமணிகளும் இந் நாட்டைப் பிடித்த பீடைகளாக நின்று துயர் செய்வதைத் தமிழகம் முழுமையுங் காணலாம். கொடுங் கோன்மை யொழியாதவரை தமிழக மக்கட்கு விமோசன மேற்பட வகையில்லை.

இவர்களது ஆதிக்கத்தின் முதற் பயன் மக்கள் அறிவு புதைக்கப்பட்டதாகும். இரண்டாவது பெண்குலத்தை மிருகக் குலமாக்கியது. இவ்விரண்டு கொடுமையும் இன்றே ஒழிக்கப் பட வேண்டும். மக்களுக்குள் உயர்வு இழிவு என்று ஜாதி பிரித்து ஜாதிக்கொரு நீதி பேசி பார்ப்பானும் பார்ப்பானுக்குப் பணங்கொடுக்கும் சில குலத்தினருந் தவிர மற்றையோர் எவ்விதப் படிப்பும் பெறுதவாறு தடுக்கப் பட்டுவிட்டது. பார்ப்பனரைத் தவிர்த்த ஏனையோர் எவரும் சில குறிப்பிட்ட நூல்களைப் படிக்கப் படாதென்றும் தடுக்கப் பட்டது. தவிர படிப்பிக்கும் உரிமை பார்ப்பனர்க்கே ஒதுக்கிவைக்கப் பட்டது. இக் காரணங்களால் நாடு அந்தகாரக் கடலில் விழுந்தது. படிப்பற்ற மக்களுக்கும் விலங்குக்கும் வித்தியாசமில்லை யென்று திருவள்ளுவனர் கூறுவது போல் மக்கள் விலங்கினங்களாக வாழ நேர்ந்திருக்கிறது. படிப்பதும் படிப்பிப்பதும் பார்ப்பனர்க் குரிமை யென்ற நிலையேற்படவே நியாய வரம்புள்ள நூல்கள் தொலைக்கப்பட்டன. பார்ப்பனரின் சுப நலத்துக்கு வேண்டிய நூல்கள் ஆயிரக் கணக்காக எழுதப் பட்டன. அவைகளைப் பார்ப்பனரே ஊர்தோறும் கோயில்கள் தோறும் குளக்கரைகள் தோறும் வைத்துப் படித்துப் பிரசாரஞ் செய்ய முன் வந்தனர். பாமர ஜனங்கள் அவைகளை நம்ப வாரம்பித்தனர்; ஏமாந்து வழிதவறிப் போய்க்கொண்டிருக்கின்றனர். எண்ணற்ற ஆண்டுகளாகப் பரம்பரையாக ஏறிவந்த அஞ்ஞான மோச உபதேசம் இன்று கொழுந்துவிட் டெரிகிறது. அதற்கெதிராக நின்று நியாயம் பேசப் புறப்படுவது எளிதாக இல்லை. எனினும் மக்கள் தொண்டாற்றுபவர் எதிர்த்துத்தான் ஆகவேண்டி யிருக்கிறது. யாருடைய உபதேசம் எப்படி யிருந்தபோதிலும் மக்கள் இன்று படுந்துயரம் எழுதி முடியாததாகும். ஜாதிச் சடங்குகள் தனக்குத்தானே நாள் தோறும் வளர்ந்து வருகின்றன. எவனே ஒரு இலைக்கள்ளியைக் கொண்டுவந்து போட்டான்; அது கடவுள் கொடுத்த வரமென்ருன்; ஜனங்கள் போற்றிவளர்க்க ஆரம்பித்துவிட்டனர். அது எல்லையற்று வளர்ந்து விட்டது. பழய காலத்துச் சரக்கென்று போற்றி வளர்த்து வருகின்றனர். அதனுல் ஏற்படுந் துயரத்தையும் நாள் தோறும் அனுபவித்து வருகின்றனர். வெட்டிச் சீர்செய்ய முன் வருபவனை இகழ்வதும் வெருட்டுவதும் பாமர ஜனங்களின் இயல்பென்பதை நாம் கூற வேண்டியதில்லையன்றே? துணிவாக நின்று சில இளைஞர்கள் வேலைசெய்ய முன் வந்தால் கற்றுழை பறக்கும். அதில் வசிக்கும் பாம்பும் தேளும் பிறவும் ஒழியும். மக்களும் நல்வாழ்வு பெறுவர். பின்னர் கிடைப்பது மக்கள் வாழ்வில் இன்பம் நல்கும் விடுதலையே யாகும். தூற்றுதலுக்கும் பிற இன்னல்கட்கும் இப்போது பயப்பட வேண்டியதில்லை. பயப்பட்டால் வேலை நடக்கப்போவதில்லை. வேலை நடவாவிட்டால் துன்பத்தை அனுபவிப்பவர் பொது ஜனங்களே யென்பதிலும் ஐயமில்லை.

## உள்ளூர்ச்செய்தி.

| | |
|---|---|
| தட்ப வெப்ப நிலை:— | கூஉ டிகிரி |
| சென்னை உண்டியல் வட்டம் | 0—உ—க |
| சென்னை நடப்பு வட்டி | 0—கச—க |
| பவுன்விலை | கரு—எ—க |
| சீமை வெள்ளிக்கட்டி | ௯அ—கஉ—க |
| இம்பீரியல் பாங்கு வட்டி எழு பெர்ஸெண்டு. | |
| இங்கிலாந்து பாங்கு வட்டி | ஐந்தரைப் பெர்ஸெண்டு. |

## தந்திச் செய்தி.

செய்கோன், சித்திரை, கஅ-உ
உண்டியல் விலை நூற்றிருபத்தெட்டு. சிங்கப்பூர் வட்டம் இருபதேமுக்கால்.

பினுங்கு, சித்திரை, ககூ-உ
உண்டியல்விலை நூற்றைம்பத்து நாலு
ஈயம் விலை நாறு.
ரப்பர் விலை நாற்பத்து மூன்று.

ரங்கூன், சித்திரை, ககூ-உ

| | |
|---|---|
| தவணைவட்டி | 0—கக—கூ |
| நடப்பு வட்டி | 0—கஉ—0 |
| புதிய பவுன் | கரு—அ—0 |
| பழையபவுன் | கரு—௯0—0 |
| படகுநெல் | ககூ0 |
| ரயில்நெல் | கருரு |
| பெரியமில் அரிசி | ருஎரு |
| யஸ். க்யூ. அரிசி | சகஎ—சகஅ |
| சிறிய மில் அரிசி | ச0எ—ச0அ |
| மீடான் அரிசி | சகஎ—சகஅ |

வெளியூர் விலைகள்:—

| | |
|---|---|
| ஏப்ரல் | ருஎ0 |
| மே | ருஎரு |

### வந்தனம்.

அமராவதி புதூரிலிருந்து திருவாளர் சுப. அருணகிரி தம்பதிகள் அடியில் வருமாறு அறிவிக்கிறுர்கள்:—

எங்கள் மணத்தைப் பாராட்டிப் பல பாகங்களிலிருந்தும் வாழ்த்துக்கள் வந்து கொண்டிருக்கின்றன. வாழ்த்துக்கள் அனுப்பிய அன்பர்கள் காட்டும் பேரன்பை நாங்கள் என்றும் மறவோம். அன்பர்கள் அனுப்பியிருக்கிற வாழ்த்துக்களை நாங்கள் மிகவும் உயர்வாக மதித்து எங்களுடைய நன்றியறிதலைச் செலுத்துகின்றோம். மணத்தைப் பாராட்டிப் பலவிதத்திலும் உதவி செய்த பேரன்பர்கட்கும், பத்திரிகாசிரியர்கட்கும் எங்கள் மனமார்ந்த வந்தனம் உரிதாகுக.

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| கப்பல் | புறப்படும் தேதி |
|---|---|
| ரஜூலா | மே ௫—உ |
| எல்லங்கா | ,, கக—உ |
| ரோகிணு | ,, ககூ—உ |
| எல்லங்கா | ,, உ௫—உ |

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகபட்டினம் வந்துசேரும் விபரம் வருமாறு:—

| கப்பல் | வந்துசேரும் தேதி |
|---|---|
| எல்லங்கா | மே எ—உ |
| ரோகிணு | ,, அ—உ |
| எல்லங்கா | ,, உக—உ |
| ரஜூலா | ,, உஉ—உ |

கப்பல்கள் புதுச்சேரியி லிருந்து சிங்கப்பூர், செய்கோன் முதலிய இடங்களுக்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| அம்பாயிஸ் | மே க௫—உ |
| கம்பெயின் | ஜூன் கஉ—உ |
| சாண்டில்லி | ஜூலை க0—உ |
| அ ஸேலி ரிடியு | ஆகஸ்டு—எ— |

### தற்கால கவர்னர்.

சென்னை மாகாணத்துக் கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கும் லப்டனண்டு கர்னல் ஜார்ஜ் ஸ்டான்லி தமது பதவியை ஒப்புக்கொள்வது வரை, லார்டு கோஷனின் ஸ்தானத்தில், ஆனரபில் ஸர் நார்மன் எட்வர்டு மார்ஷ் பாய்ல் கே. ஸி. ஐ. இ., ஸி. யஸ். ஐ., ஐ. ஸி. யஸ். (கவர்னர் நிர்வாக சபை மெம்பர்) அவர்கள் தற்காலக்கவர்னராக ஆக்டு செய்வதை மாட்சிமை தங்கிய சக்கிரவர்த்தியார் அங்கீகரித்துவிட்டார். அடுத்த ஜூன் மாத முதல் லார்டு கோஷன் கவர்னர் ஜெனாலாக ஆக்டு செய்வார்.

### அண்ணுமலை யூனிவர்ஸிடி.
வைஸ் ஸான்ஸலர்.

அண்ணுமலை யூனிவர்ஸிடியின் வைஸ் சான்ஸலர் பதவியைப்பற்றி மேன்மை தங்கிய சான்ஸலர் ஆலோசித்து வருவதாகத் தெரிகிறது. வைஸ் ஸான்ஸலர் நியமிக்கப்படுவது வரை மற்ற காரியங்கள் நடக்கமுடியாததால் கூடிய விரைவில் இப்பதவி பூர்த்தியாக்கப்படும். சிறந்த திறமையுடைய ஐரோப்பியர் கிடைக்காவிட்டால், கேம்பிரிட்ஜ் அல்லது ஆக்ஸ்போர்டு சென்று அனுபவம் பெற்ற இந்தியருக்கு இப்பதவி கொடுக்கப்படுமென்று ஊகிக்கப்படுகிறது. கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் சமீபத்தில் பிரின்ஸிபால் வேலையை ஒப்புக்கொண்ட புரொபசர் யஸ். இ. ரங்கநாதன் அவர்களுடைய பெயர் குறிப்பிடப்படுகிறதென சென்னை 'இந்து'ப்பத்திரிகையின் விசேட நிருபர் அப் பத்திரிகையில் எழுதியிருக்கிறுர்.



## காரைக்குடி முனிஸிபாலிட்டி.

(நமது நிருபரிடமிருந்து)

சென்ற வியாழக்கிழமை காலை கூ மணிக்கு காரைக்குடி முனிஸிபல் கவுன்ஸிலின் விசேடக் கூட்டமொன்று நடைபெற்றது. அவ்வமயம், திரு. வி. பி. அழகன் தவிர ஏனைய பதினுன்கு அங்கத்தினர்களும் வந்திருந்தனர். தலைவர் வைஸ் பிரஸிடெண்டு தேர்தலுக்காகக் கூட்டம் கூடியிருக்கிறதென்றும் ஆகையால் தேர்தல் நடத்தலாமென்றும் தெரிவித்தவுடன்,

ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார்:— வைஸ் பிரஸிடெண்டு ஸ்தானத்திற்குத் தகுதி உடையவரும், பிரஸிடெண்டு அவர்களோடு ஒத்துழைப்பவர்களுமாகிய திரு. மு. ராம. பெரியணன் செட்டியவர்களை வைஸ் பிரஸிடெண்டு ஸ்தானத்திற்கு நான் 'பிரப்போஸ்' செய்கிறேன்.

இதை திரு. வீ. சித. நா. சிதம்பரம் செட்டியார் ஆமோதித்தார். திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியார் ஆதரித்தார். வேறு போட்டியில்லாததால் திரு பெரியணன் செட்டியார் அவர்களே வைஸ் பிரஸிடெண்டாகத் தேர்ந் தெடுக்கப்பட்டார் என்று தலைவர் அறிவித்தார்.

திரு பெரியணன் செட்டியார்:— இந்த கவுன்ஸிலின் வைஸ் சேர்மனுக ஏகமனதுடன் தேர்ந்தெடுத்ததற்கு சந்தோஷத்தோடு நன்றி செலுத்துகிறேன். நமது முனிஸிபாலிடி மூலம் நகரத்திற்குச் செய்யவேண்டிய சீர்திருத்தங்கள் பலவிருக்கின்றன. அவைகளுக்காக என்னுலியன்ற வரை வேலை செய்ய முயற்சிப்பேன். அதற்கு உங்களுடைய உதவி பெரிதும் இருக்குமென்று நம்புகிறேன்.

திரு. சொ. முருகப்பன்:—இன்றுபோட்டியில்லாமல் ஊக்கமுடைய ஒரு இளைஞருக்கு இந்த ஸ்தானம் கொடுக்கப்பட்டதற்கு மகிழ்ச்சியடைகிறேன். இந்த பிரேரணையை திருவாளர் ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியாரவர்களே கொண்டுவந்தது அவர்களுக்கு இளைஞர்களை ஊக்கப்படுத்த வேண்டுமென்பதில் ஆர்வமிருக்கிறதென்பதையும் அவர்களுடைய பெருந்தன்மையையும் காட்டுகின்றது. அவர்கள் தாலுகா போர்டு, நம்முடைய யூனியன் போர்டு முதலிய இடங்களில் தலைவராகவும், மற்றும் பல ஸ்தாபனங்களில் பொறுப்புள்ளவர்களாகவும் இருந்து வருபவர்கள். அவர்கள் இந்தத் தீர்மானத்தைக்கொண்டு வந்ததில் உங்கள் எல்லோர்க்கும் சந்தோஷமாகவே இருக்கும். அப்படியே நானும் சந்தோஷப்படுகிறேன். இளைஞர்களுக்கு இம்மாதிரியான ஸ்தானங்கள் இந்த சபையில் புதிதென்றே எண்ணுகிறேன். இப்படியே அவர்களை ஊக்கப்படுத்தி வர வேண்டுமென்றும் விரும்புகிறேன். நமது முனிஸிபல் சபையைப்பற்றிக் கவனிப்பவர்களுக்கெல்லாம் வைஸ் பிரஸிடெண்டு தகராறுனது முக்கியமானதாக இருந்தது. இன்று அது சந்தோஷமாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இனி எல்லா விஷயங்களும் ஒற்றுமையாக நடைபெறுமென்றே நான் நம்புகிறேன்.

திரு. பெரியணன் செட்டியாரவர்கள் சீர்திருத்தஞ்செய்ய வேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன எனக் குறிப்பிட்டார்கள். ஏராளமாக இருக்கின்றன. ஆனுல் ஆறுமாதங்கட்கிடையில் நாம் எவ்வளவு சீர்திருத்தம் செய்ய முடியுமென்பதைச் சொல்ல முடியாவிட்டாலும் முடிந்தவரையில் ஒற்றுமையாக முயன்ருல் சிறிதளவாவது செய்தல் கூடும்.

பின், தலைவர் திரு. பெரியணன் செட்டியாருக்குச் சந்தோஷத்தினிடையே பூமாலை அணிவித்தார்.

இத்துடன் கூட்டம் கலைந்தது.

### அரிசியில் வேலை.

டில்லியிலுள்ள தருவ்புல்லா சங்கத்திலிருந்து பெஜவாடா முனிஸிபல் கவுன்ஸில் சேர்மன் திரு. சீதாராமய்யாவுக்கு ஒரு அரிசி அனுப்பப்பட்டிருக்கிறதாம். அதில் நூற்று ஒரு எழுத்துக்களடங்கிய வாக்கியம் சாமர்த்தியமாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வரிய வேலையை மெச்சி, திரு. சீதாராமய்யா மேற்படி சங்கத்திற்கு இருபது ரூபாய் அளித்திருக்கிறுர்.

## சென்னை சர்க்காருக்கு வந்தனம்.

(ஒரு நிருபர்)

தேவகோட்டை 'தாலுக் போர்டின்' சென்ற கூட்டத்தில் ஆலோசனைக்கு வைக்கப்பட்டிருந்த பல விஷயங்களுக்கிடையே எதிர்கால வருஷ 'பட்ஜெட்' 'அஜெண்டாவில்' குறிக்கப்பட்டிருந்தது. தயாரிக்கப்பட்டிருந்த 'பட்ஜட்' திட்டங்கள் முழுவதும் தயாரித்த தலைமை குமாஸ்தாவுக்குத்தான் புரியக்கூடியதாக இருந்தது. பல வருடங்களாக 'லோகல் போர்டு'களில் அங்கத்தினராகவும் 'பிரஸிடெண்டாகவு மிருந்த திருவாளர் முகுந்தராஜா அவர்களையே டி திட்டம் மயக்கவைத்ததென்றுல் திருவாளர் ஆவி. பழ வைப்போல் திறமையில்லாத மற்ற அங்கத்தினர்கட்கு எவ்வளவு மயக்கத்தைத் தந்திருக்குமென்பதைச் சிரத்தையுள்ளோர் அறிக. இனி இந்த இலட்சணத்தோடு கூடிய பட்ஜெட்டின் பொருத்தமின்மையை ஆங்காங்கே திருத்தவேண்டிய கடமையைச் செலுத்துவதற்கமட்டும் போர்டில் அங்கத்தினரவர்கள் கோரியதில், போர்டாரின் அங்கீகாரத்தை எதிர்பார்த்து சில மாதத்திற்கு முன் பட்ஜெட்டை கவர்ன்மெண்டுக்கு அனுப்பிவிட்டதாகவும், ஆட்சேபிக்காமல் நிறைவேற்றிவிடவேண்டுமென்றும் பிரஸிடெண்டு போர்டாரைக் கேட்டார். போர்டாரையே ஜிக்காமல் ஏன் செய்யப்பட்டதென்று ஒரு அங்கத்தினர் கடாவியதில், பட்ஜெட் தாமதமாகத் தயாரிக்கப்பட்டதென்றும், கவர்ன்மெண்டிலிருந்து துரிதப்படுத்தியதால் நடந்தவரை சரிப்படுத்தி கவர்ன்மெண்டுக்கு அனுப்பிவிட்டதாகவும், போர்டாரைக் கேட்க சாவகாசமில்லை என்றும் பிரஸிடெண்டால் சொல்லப்பட்டது. விஷயங்களிருந்தால் ஒரு மாதத்திற்கொருமுறை போர்டின் மீட்டிங்கை நடத்த ஏற்பாடு செய்யவேண்டுமென்றும், இன்னும் பலநமுநு முறைகளைக் கையாளவேண்டுமென்றும் லோக்கல் போர்டு ஆக்டு கூறும்பொழுது போர்டின் மீட்டிங்குகளைக் கிரமமாக நடத்துவதற்கும், பட்ஜெட்டைப் போன்ற மிக முக்கியமான விஷயத்தைக் காலா காலத்தில் கவனித்து வாக்காளர்களின் பிரதிநிதிகளாகிய மற்ற எல்லா அங்கத்தினர்களின் கூட்டத்தைக்கூட்டி அவரவர்களுடைய அபிப்பிராயங்களையும் கேட்டு தக்க ஒரு திட்டத்தை தயாரித்து கவர்ன்மெண்டார் விரட்டுவதற்கு முன் பதட்டமின்றி நடவடிக்கை செய்யவும் சாவகாசமில்லாதவர் ஏன் பிரஸிடெண்டாக ஆசைப்பட்டிருக்கவேண்டும்? தாலுக்போர்டு அலுவலின்றி கலியாணம் புதுமைகளுக்குப் போகும்போதும் கூட தாலுக் போர்டு பியூனை டவாலியுடன் அழைத்துப்போகும் போதும் கூட தாலுக்போர்டு வேலைகளைக் கவனிக்கவேண்டிய காலத்தில் கவனிக்க ஞாபகமேற்படாததும் போர்டு வாக்காளர்களின் கஷ்ட காலமேபோலும். பிரஸிடெண்டவர்களின் பிரஸ்தாப செய்கையைக்கண்டித் தும் இவரிடத்தில் நம்பிக்கை இல்லை என்றும் அங்கத்தினர் திரு. கரு முத்தசிவலிங்கம் ஒரு தீர்மானத்தைப் பிரேரேபித்துப் பல காரணங்களுடன் தகுந்தபடி பேசியும் மேலும் டி போர்டில் டி தீர்மானம் வெற்றியடையாதென்றும் ஆயினும் அநியாயமான, அலட்சியமான, கிரமமற்ற, திறமையற்ற போக்கைப்பற்றி ஒரு அங்கத்தினரின் கண்டனமாவது ரிக்கார்டாக வேண்டியதையும் வாக்காளர்களுக்கும், பொது ஜனங்களுக்கும் தெரிய வேண்டியதை உத்தேசித்தும் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்ததாகவும் பேசினர். திருவாளர் முகுந்த ராஜா அவர்கள் ஆமோதித்தார்கள். திருவாளர் உ. ராம. உ. மு. லெட்சுமணன் செட்டியாரவர்கள் ஆதரித்தார்கள். மன்னுர்குடியிலிருந்து காரைக்குடிக்கு வந்து வாத்தியார் வேலை பார்த்துக் கொண்டிருக்கிற கனம் வெங்கட்டராம சாஸ்திரிகளுக்குக் காரைக்குடி சர்க்கிள் வரிச் செலுத்துபவர்கள் பேரில் கிருபை ஏற்பட்டு டி சர்க்கிளுக்கு ஒரு அபேட்சகராக நின்று தமக்கு எதிரியாக நின்ற பெருந் தனவந்தர்கள் முதலிய பிரபலஸ்தர்களையும் தோற்கடித்து காரைக்குடி சர்க்கிளின் ஏராளமான வோட்டர்களால் தெரிந்தெடுக்கப்பட்டவர்களென்று டி பிரஸிடெண்டவர்களால் பகிரங்கப் படுத்தப்பட்ட சாஸ்திரிகள் எழுந்து தாம் ரெம்பக் காலமாய் இந்தப் போர்டிலே மெம்பராக விருக்கிறதாகவும், இந்தப்போர்டில் பிரஸிடெண்டவர்கள் செய்துவிட்டால் ஆமோதிக்கிறது தான் வழக்கம் என்றும் எனவே வழக்கத்தை அனுசரித்துச் செய்யப்பட்ட பிரஸ்தாபச் செய்கையையும் எல்லாரும் ஆதரிக்க வேண்டுமென்றும் தீர்மானத்திற்கு விரோதமாக எல்லாரும் "வோட்" செய்ய வேண்டுமென்றும், மேலும் பிரஸிடெண்டின் குறித்த செய்கையைப்பற்றிப் பாராட்டியும் பேசினர். பிரஸிடெண்டவர்களிடத்தில் பக்தியுள்ளவர்களின் ஆதரவால் எதிர்பார்த்தபடி தீர்மானம் தோற்றுப் போயிற்று. ஆஜராயிருந்த ஒன்பது அங்கத்தினர்களில் தீர்மானத்திற்கு சாதகமாக திருவாளர்களான சருமுத்து சிவலிங்கம், எம். ஜி. முகுந்த ராஜா, உ.ராம. உமு லெட்சுமணன் செட்டியாரவர்களும், பாதகமாக திருவாளர்களான உமு. பெரி. மு அரு. அருணசலஞ் செட்டியாரவர்களும், என். எஸ். வெங்கிட்டராம சாஸ்திரிகளும் சித. நா. நாராயணன் செட்டியாரவர்களும் இன்னும் மூவரும் "வோட்" செய்தார்கள். பிரஸிடெண்டின் ஒழுங்குக் குறைவைக் கண்டித்த ஒரு தீர்மானத்தை சுயேச்சைக் குணம் சிரம்பி சம்பிரமாக ஆதரித்த அங்கத்தினர் திரு. லெட்சுமணன் செட்டியாரவர்கள் செய்கை மிகவும் பாராட்டத்தக்கது. தாலுக்கா போர்ட்டின் பிரமச் சட்டங்களையும் அறிந்து கொள்ளாத அதிகாரங்களைத் தர்னியோகப் படுத்துகிற இந்தப் பிரஸிடெண்டு காரைக்குடி முனிஸிபாலிட்டியின் ஆரம்ப காலத்தில் தலைவராகிவிட முயற்சித்தார். அக்காரணம் பற்றியோ இவரை நியமிக்காது விடுத்த சென்னை சர்க்காருக்கு வந்தனம்.

திருவாளர், மு. ராம. பெரியணன் செட்டியார்.
காரைக்குடி முனிஸிபல் வைஸ் சேர்மன்.

### கொழும்பில் சிவாலயம்.
பதினைந்து லட்ச ரூபாய் செலவு

கொழும்பு கொச்சிக்கடையிலுள்ள அந்தோனியார் கோவிலையடுத்த இருபது வருடகாலமாகஒரு சிவாலயம் கட்டப்படுகிறது. இலங்கையில் இவ்வளவு சிறந்த கோவிலில்லையெனச் சொல்லப்படுகிறது. இந்தியாவிலிருந்தே கைதேர்ந்த வேலைக்காரர்கள் சென்று வேலை செய்கின்றனராம். இதற்கு மொத்தம் பதினைந்து லட்சம் ரூபாயாகுமெனக் கூறப்படுகிறது. தென் இந்திய முறைப்படிப் பலவித சித்திர வேலைகளுடன் அமைக்கப்படும் இக்கோவில் இராமேஸ்வரம் கோவிலைப்போல் தோன்றுகிறதாம். இக்கோவிலில் சகல வகுப்பினர்களும் சென்று தரிசிக்க அனுமதி அளிக்கப்படுமாம்.

## ஆப்கன் போர்.

### அமானுல்லாவின் வெற்றி.

ஏப்ரல் கூ௰-ம் தேதி முதல் அமானுல்லா கஜினியி லிருந்து வருவதாகத் தெரிகிறது. ஆனுல் நிச்சயமான செய்திகள் நம்பத்தக்க விதத்தில் கிடைக்கவில்லை.

### ஜெனரல் நாதர்கான்

பொ சுதீன் கில்லாய் என்பவர் நாதர்கானின் நண்பரைப்போல்நடித்து அவரையும் அவரது சகோதரர்களையும் விருந்துக் கழைத்துச் சிறைசெய்துவிட்டதாகவும், நாதர்கான் தப்பி ஓடிவிட்டதாகவும், அவரது சகோதரர்கள் இன்னுஞ் சிறையிலேயே இருப்பதாகவும் கூறப்படுகிறது.

கஜினிக்கு வடக்கே, அமானுல்லாவின் படைகளுக்கும் ஹபிபுல்லாவின் படைகளுக்கும் போர் நடந்ததாகவும், அதில் அமானுல்லாவின் படைகளே வெற்றி பெற்றன வென்றும் கூறப்படுகிறது.

### நாதர்கானைக் கொல்ல.

'பயனியர்' பத்திரிகைக்குப் பெஷாவர் நிருபர் அடியில் வருமாறு தந்தி கொடுத்திருக்கிறுர்:—

கிழக்கு, மேற்கு மாகாணங்களில் பாச்சா சாகோவின் உத்தரவின் பேரில் ஆகாயக் கப்பல்கள் மூலம் பல துண்டுப் பிரசுரங்கள் பரப்பப்படுகின்றன. அவற்றில் அடியில் வருமாறு குறிக்கப் பெற்றிருக்கிறது:—

'ஜெனரல் நாதர்கானை உயிருடன் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு ச0000 ரூபாயும் ஒரு பீரங்கியும் கொடுக்கப்படும். அவரது தலையை மட்டும் கொண்டு வருபவர்களுக்கு ௩0000 ரூபாயும் ஒரு பீரங்கியும் கொடுக்கப்படும். அவரது சகோதரர் ஒவ்வொருவரையும் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு க0000 ரூபாயும் ஒரு பீரங்கியும் கொடுக்கப் படும்.

அமீர் ஹபிபுல்லா.

## அண்ணமலை
## சர்வ கலாசாலை.

மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் திடீரெனக் கிழக்காப்பிரிக்காவுக்குப் பிரயாணமாகப் போவதாலும், அங்கு எவ்வளவு காலம் இருக்கவேண்டி வருமெனத் தெரியாததாலும், அண்ணமலை சர்வ கலாசாலையின் வைஸ் சான்ஸலர் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார் எனத் தெரிகிறது.

அண்ணமலை சர்வகலாசாலையை நடத்துவதற்கான சட்ட திட்டங்களைத் தயாரிக்க திருவாளர்கள் அல்லாடி கிருஷ்ணஸ்வாமி அய்யர், டப்ளியு எர்லம் ஸ்மித், திவான் பகதூர் கே. ராமுன்னி மேனன் ஆகியவர் அடங்கிய கமிட்டி ஒன்று நியமிக்கப்பட்டிருக்கிறது.

---

### சீனாவில் விமானங்கள்.

சீனாவில் ஆகாயப் போக்குவரத்தை ஏற்படுத்த, தேசிய கவர்ன்மெண்டார் இங்கிலாந்தில் ௧௨ விமானங்களுக்கு ஆர்டர் கொடுத்திருக்கின்றனராம்.

### கேரள இந்துக்களின் மகாநாடு.

கேரள இந்துக்களின் மகாநாடு திருவையாறு என்ற இடத்தில் மே-மீ ௯-ம் தேதி நடக்கும். ஆலயப் பிரவேச விஷயமும் தீண்டாமை விலக்கும் இதில் ஆலோசிக்கப்படுமாம்.

### ரயில்வண்டியில் மெயில் கொள்ளை.

பிரூர்ஷி மோகா என்னும் பஞ்சாப் ரயில் பாதையில் ஓடிக்கொண்டிருந்த ஒரு மெயில் வண்டியிலிருந்து, சில தினங்களுக்கு முன் கொள்ளைக்காரர்கள் ௨௪ இன்ஷியூர் கவர்களைக் கொள்ளையடித்துச் சென்றனராம்.

### ஸைமன் கமிஷன்.

ஏப்ரல் ௨௧-ம் தேதி ஸைமன் கமிஷன் லண்டன், விக்டோரியா ஸ்டேஷனில் சென்றிறங்கிய பொழுது பகிஷ்கார ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. ஸ்டேஷனை நோக்கி ஒரு ஊர்வலம் சென்றது. போலீஸார் ஊர்வலத்தைக் கலைத்துக் கொடிகளைப் பிடுங்கிக்கொண்டு போய் விட்டனர். லண்டன் காங்கிரஸ் கமிட்டியின் உதவிக் காரியதரிசியும் மற்றும் சில இந்தியர்களும் பலவந்தமாக அப்புறப்படுத்தப் பட்டனர். திரு. ஸன்யால் போலீஸாரின் உத்தரவை மீறியதாகக் கைது செய்யப்பட்டார். மொத்தம் நாலுபேர் கைது செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

### கள்குடிக்கப் பிரசாரம்.

திருப்பூரிலிருந்து ஸ்ரீமான் என். எஸ். வரதாச்சாரி 'சுதேசமித்திர'னில் அடியில் வருமாறு வரைந்திருக்கிறார்:—

திருப்பூர் நகரவாசிகள் நேற்று (ஏப்ரல் ௨௰) காலை கண்விழித்தெழுந்ததும் 'முன்னைவிட மலிவாக இனிய கள் விற்கப்படும். எல்லாரும் குடிக்கலாம்' என்று தண்டோராப்போட்டுத் தெருவில் விளம்பரப்படுத்தப் பட்டது.

### மாஜி இந்தூர் மகாராஜாவின்குழந்தை

இந்தூர் மாஜிமகாராஜாவுக்கு அவரது அமெரிக்க மனைவியார் ஸ்ரீமதி நான்ஸி ஆன்மில்லர் பெற்ற மூன்று மாதப் பெண்குழந்தை சில தினங்களுக்கு முன் வேத முறைப்படி சீமையில் சூரியனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டது. சாரதா என்று அதற்குப் பெயரிடப்பட்டது. நாமகரண விழாவுக்கெனத் தனியாக மைசூரிலிருந்து சந்தனக் கட்டைகள் வரவழைக்கப் பட்டிருந்தன. கிரியைகளைச் செய்ய ஜகத்குரு சங்கராச்சாரியாருடைய உத்தரவின் பேரில் லண்டனிலிருந்து ஒரு புரோகிதர் வரவழைக்கப் பட்டிருந்தார்.

### பாராளுமன்றத்தில் பெண் அங்கத்தினர்.

இருபத்து நாலு வயதுடைய மிஸ். ஜென்னி லீ என்ற பெண் நார்த்லானர்க்கில் பாராளுமன்ற அங்கத்தவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார். இவரே மிகக் குறைந்த வயதுடைய பெண் அங்கத்தவர்.

---

ராஜா ஸர் அண்ணமலை செட்டியாருக்கு திரு. சா. அ. வீட்டில் நடைபெற்ற விருந்துக்காட்சி. (பிரஸ்போட்டோ பீரோ)

## பெண் தேவை.

தகுதிவாய்ந்த, நாட்டுக்கோட்டை நகரவைசிய கனவானுக்கு நாட்டுக்கோட்டையார் வகுப்பைச் சேர்ந்த கணவனிழந்த பெண் தேவை. பெண்ணின் வயது இருபத்திரண்டுக்குட்பட்டதாக இருத்தல் வேண்டும். சிறிதாவது கல்வி கற்றிருந்தால் நலம். கல்யாணம் பகிரங்கமாக நடத்தப்படும். விரும்புவோரும் உதவி செய்பவரும் கீழ்க்கண்ட விலாசத்திற் கெழுதவும்.

குறிப்பு:— இது சம்பந்தமான எல்லா விஷயங்களும் இரகசியமாக வைக்கப்படும்

'X'
C/o குமரன் ஆபீஸ்,
காரைக்குடி.

## பெண் தேவை.

தகுதிவாய்ந்த நாட்டுக்கோட்டை நகரவைசிய கனவானுக்கு நாட்டுக்கோட்டையார் வகுப்பைச் சேர்ந்த கணவனிழந்த பெண் தேவை. கன்னி விதவையாக இருத்தல் வேண்டும். கல்வி கற்றிராவிடினும் பாதகமில்லை. பெண் அழகிய தோற்றமும் சிவப்பு நிறமு முடையவளாக இருத்தல் வேண்டும்.

குறிப்பு:—இது சம்பந்தமாக எல்லா விஷயங்களும் இரகசியமாக வைக்கப்படும்.

'Y'
C/o குமரன் ஆபீஸ்,
காரைக்குடி.

### ஜப்பானில் புயல். நூறு பேர் மாண்டனர்.

சமீபத்தில் ஜப்பானில் பெரும்புயல் அடித்ததால் ஒரு பெரிய கப்பல் பாறையில் மோதி மூழ்கிவிட்டது. இதனால் ௧௦௦ பேர் கொல்லப்பட்டனராம்.

### மகாத்மாவின் சுற்றுப்பிரயாணம்.

ஆந்திர தேசத்தில் சுற்றுப் பிரயாணஞ் செய்யும் மகாத்மா காந்திக்கு குண்டூர் ஜில்லாவில் நாற்பத்தையாயிரம் ரூபாய்வரை வசூலாயிருக்கிறதாம். அங்கு சுமார் இரண்டாயிரம் ரூபாய் பெறுமான நகைகளும் கிடைத்தனவாம்.

### திரு. ம. ரா. குமாரசாமிப் பிள்ளை காலஞ் சென்றார்.

மணம் பூண்டி ஞானியார் ஆசிரமத்தை கிறுவியவரும், தமிழ் வித்வானுமான திரு. ம. ரா. குமாரசாமி பிள்ளை திருக்கோயிலூர் டேனிஷ் மிஷன் ஆஸ்பத்திரியில் ஏப்ரல் ௨௬-ம் தேதி காலை ௬-௩௦ மணிக்குக் காலஞ் சென்றார்.

### கோவில்பட்டி கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் கிளைச்சங்கத் திறப்புவிழா.

அருப்புக்கோட்டை, ஏப்ரல் ௨௰
(நமது நிருபர்)

ஷை சங்கத்தின் திறப்புவிழா இந்நகர் திரு. குருவய்ய நாயக்கர் அவர்களின் சீதாபதி மாளிகையில் ௨௪-௪-௨௯ ௬-௩௦ மணிக்கு நடைபெற்றது. இராமனுதபுரம் ஜில்லா போர்டு தலைவரும் சென்னை சட்டசபை அங்கத்தவருமான திரு. சௌந்திரபாண்டியன் அவர்களால் திறந்துவைக்கப்பெற்றது. நகர முக்கியஸ்தர்கள் பலரும் அஸிஸ்டண்ட் இன்ஜினியர் அவர்களும் விவசாயிகளும் விஜயம் செய்திருந்தனர். அநேகர் பங்குதாரர்களாகச் சேர்ந்தனர். திரு. சௌந்திரபாண்டியன் அவர்கள் ௩௦ பங்கும் இந்நகர் செல்வந்தரும் ஹனரரி மாஜிஸ்டிரேட்டுமான கோபாலகிருஷ்ணசாமி நாயக்கர் அவர்கள் ௫௦ பங்கும் அதிகமாக எழுதியிருக்கிறார்கள். வந்தனோபசாரம் கூறியதும் திறப்புவிழா இனிது முடிவெய்தியது.

### சென்னைக்குப் புதிய கவர்னர்.

'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையின் லண்டன் நிருபர் அப்பத்திரிகைக்குப் பின்வருமாறு அறிவித்திருக்கிறார்:—

இவ்வருடத்தில் வேலையினின்றும் நீங்கிக் கொள்ளும் வைகவுண்டு கோஷனுடைய ஸ்தானத்தில் டெர்பி பிரபுவின் சகோதரர் லப்டினண்ட் கர்னல் ரைட் ஆனரபில் ஜார்ஜ் பிரடரிக் ஸ்டான்லி பி. ஸி, ஸி. யம். ஜி., சென்னை கவர்னராக நியமிக்கப்பட்டிருப்பதாக உத்தியோக தோரணையில் அறிவிக்கப் பட்டிருக்கிறது. இவர் பதினறாவது டெர்பி பிரபுவின் ஆறாவது புத்திரர். வெல்லிங்டனிலும் உல்விச்சிலும் கல்வி பயின்றார். தமது ௧௯-வது வயதில் ராயல் குதிரை பீரங்கிப் படையில் சேர்ந்து அதன் காப்டன் ஆனார். தென் ஆப்பிரிக்கா யுத்தத்திலும் ஐரோப்பிய மகாயுத்தத்திலும் ஊழியம் புரிந்திருக்கிறார். அவருடைய திறமைக்காகவே ஸி. யம். ஜி. என்ற பட்டம் கொடுக்கப்பட்டது. ௧௯௦௪ முதல் ௧௯௦௬ வரையிலும் பீரங்கிப் படையில் அட்ஜுடென்டாக இருந்தார்.

௧௯௧௦ முதல் ௧௯௨௨ வரை பிரஸ்டன் தொகுதியில் கன்ஸர்வேடிவ் கட்சியின் பிரதிநிதியாகப் பார்லிமெண்டில் இருந்தார். யுத்த இலாகாவில் ௧௯௨௧, ௨௨-ல் காரியதரிசியாகவும், ௧௯௨௨-௨௩ல் பார்லிமென்டரி உபகாரியதரிசியாகவும் வேலை பார்த்தார். ௧௯௨௭-ல் பிரிவி கவுன்ஸிலராக நியமிக்கப்பட்டார்.

---

### சென்னைபுரி அன்னதான சமாஜம். ராஜா ஸர் அண்ணமலையின் நன்கொடை.

சென்னைபுரி அன்னதான சமாஜத்திற்கு கனம் ராஜா ஸர் அண்ணமலைச் செட்டியாரவர்கள் ஸமாஜத் தலைவர் கனம் ஜஸ்டிஸ் வேங்கட சுப்பராவ் மூலமாக ஆயிரம் ரூபாய் நன்கொடையளித்திருக்கிறாரெனத் தெரிகிறது.

---

### அமெரிக்க அதிகாரிகள். டாக்டர் தாகூரை அவமதித்தனர்.

கானடாவிலிருந்து சமீபத்தில் அமெரிக்காபோய்ச் சேர்ந்த கவி ரவீந்திரநாத் தாகூர் திடீரென ஜப்பானுக்குப் புறப்பட்டு விட்டார். ஐக்கிய மாகாண குடியேற்ற அதிகாரிகள் அவரை அவமதித்ததே காரணமென அவருடைய காரியதரிசி அறிவித்தார்.

### ஸ்ரீநாராயண தர்ம பரிபாலன யோகம்.

ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகம் என்ற மலையாளத்தீயர்கள் சபையின் ௨௬-வது வருட விழா, மே. ௬, ௭, ௮-ம் தேதிகளில் கோட்டயத்தில் நடைபெறும். அதே வாரத்தில் பண்டித மாளவியாவின் தலைமையில் ஆலயப்பிரவேச மகாநாடு நடைபெறும். ஈ. வெ. ராமசாமிப் பெரியார் தலைமையில் சுயமரியாதை மகாநாடும் நடைபெறும்.

### கைத் தொழிலுக்கு ஒரு கோடி

தமது சமஸ்தானத்தில் குடிசைத் தொழில்களின் அபிவிருத்திக்காக, கைத்தொழிற் பரீட்சைகள், இபக்திரக்காட்சிகள், பொருளாதார சாஸ்திர ஆராய்ச்சி, கைத்தொழில் சாஸ்திர ஆராய்ச்சி முதலியவற்றை நடத்த ஒரு நிதியை ஏற்படுத்த மேன்மைதங்கிய நிஜாம் மன்னர் ஒரு கோடி ரூபாய் அனுமதித்திருக்கிறார்.

### லண்டன் ஹோட்டலில் களவு.

மேற்கு லண்டன் ஹோட்டல் ஒன்றில் ஒரு லட்சப் பிரபுவின் மனைவிக்குரிய ஐம்பதினயிரம் பவுன் பெறுமான முன்ன நகைகள் களவாடப் பட்டனவாம்.

---

### ஒரு திருத்தம்.

'குமரன்' ௯௬-வது முத்து ௧௧-வது பக்கத்தில் வெளியாயிருக்கும் ஆத்தங்குடி கலவர வழக்கு விஷயத்தின் முடிவில், திரு. கே. ரங்கநாதன் செட்டியார் என்றிருப்பதை திரு. கே. ராமநாதன் செட்டியார் எனத்திருத்தி வாசிக்கவேண்டுகிறோம்.

(ப-ர்)

---



# தமிழ் நாடும் வடமொழியும்.

'தமிழ்ப்பிள்ளை' எழுதுவது:

தமிழ் நாட்டின் சரித காலங்களில் ஆட்சி முறை, வேறுபாட்டினல் பிற மொழிகள் தமிழ் மொழியோடு போட்டிக்கு வந்தன. அவைகளில் பார்ப்பனீய பாஷையாகிய வடமொழி யொன்று. அதன் பின்னர் சமண பௌத்த சமயப் பாஷையாகிய பாலி இரண்டாவது. வடமொழியும் பாலியமும் தமிழ் நாட்டில் நன்மையும் தீமையும் பெருகச் செய்தன. வடமொழி யாதிக்கத்தால் தமிழ்க் கோவில் நாகரிக வளர்ச்சி தடை பட்டது. பாலி நாகரிகத்தால் தமிழ் மக்களுக்கு வாழ்க்கை வெறுப்பு என்ற மனப்பிணி உண்டாயது. வாழ்க்கை வெறுப்பு, பாலீயக் கொள்கைகளாகிய செல்வ நிலையாமை, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை முதலிய ஊக்கத் தளர்ச்சிக்கு ஏதுவான முறைகளால் ஏற்பட்டது. ஒவ்வொரு கோவிலும் ஒவ்வொரு பல்கலைக் கழக மேடையாய் அமைக்க நோக்கிய நம் தமிழ் நாட்டு வளர்ச்சியானது பார்ப்பனீய ஆதிக்கத்தால் தடைப்பட்டது. உதாரணமாகத் திருவானைக் காவலை அப்பு ஸ்தலமென்றும், காஞ்சியை பிருதிவி ஸ்தலமென்றும் கூறுவது ஏன்? சிவதத்துவ நிலயங்களாகிய தத்துவக் கோவில்கள், தத்துவ ஆராய்ச்சி செய்யாமல் பார்ப்பனீய வயிற்றுப் பிழைப்புக்கும் வயிறு புடைக்கச் சோறு தின்று சோம்பித்திரியவும் பயன் படுமாறு, பார்ப்பனீய ஆதிக்கம் செய்துவிட்டது. பிருதிவி ஸ்தலம் என்ற காஞ்சிக்கோவில் செய்ய வேண்டிய வேலை யென்ன என்று பழந்தமிழ் வகையால் தெளிவோம். பிருதிவி என்றது மண். எனவே பிருதிவி ஸ்தலம் "மண் ஆராய்ச்சிக் கழகமாடம்" ஆயிற்று. கோவிலமைப்பு முதலிய கூறுபாடுகளை நோக்கினல் காஞ்சிக் கோவில் ஒரு ஞான ஆராய்ச்சி மேடை என்பது புலனகும். மண் என்ற தத்துவ ஞான ஆராய்ச்சி என்றால் என்ன? என்பது விளக்கற்பாலது. மண் தத்துவம் சிவ தத்துவங்களில் முதல்படி ஞானமாகும். இந்தத் தத்துவத்தைத் தமிழ்ப் பழம் மக்களே ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். இந்தத் தத்துவ ஆராய்ச்சி செய்ததின் பின்னரே, பிற தத்துவ ஆராய்ச்சி செவ்வனே நடை பெறுதவாறு பார்ப்பனீயப் பாலீயத் தடைகள் ஏற்பட்டன. மண் தத்துவம் என்று கூறினல் அது ஆங்கிலத்தில் (Geology) ஜீயாலஜி என்று பொருள்படும். மண் என்ற நிலப் பாகுபாட்டை ஐந்திணையாக வகுத்து மருதம், முல்லை, நெய்தல், முதலிய வகுப்பாராய்ச்சி செய்து ஆங்காங்கு, விளையும் பயிர்களை ஆராய்ச்சி வகையால் தெளிந்து மண்ணைப்பற்றிய நுணுக்க ஆராய்ச்சியினுல் மனம், வாக்கு, காயங்களால் மண் ரகசியங்களைக் கண்டு பிடித்து முயற்சியின் பலனைப் உழவு என்ற கலை அல்லது கல்வி நாட்டுக்குக் தரப்பட்டது. தமிழ் நாட்டின் உழவுக்கலை பிற்காலத்தில் உலகத்துக்கே உதவப்பட்டதாகும். மண் ஆராய்ச்சிக்கழக மாடமாகிய பிருதிவி ஸ்தலமென்ற காஞ்சிக் கோவில் உழவுக்கலைக்கும் மண்ணாராய்ச்சி வகைக்கும் என்ன செய்தது? அது செய்யாது தடை செய்தது எது? பார்ப்பனீயச் சோற்றுக் கூச்சலாகிய வடமொழிக் குழறுபடையே யாகும். மண்ணாராய்ச்சி மாடமாகிய பிருதிவியம்பலமென்ற காஞ்சியைப் போலப் பிற கோவில்களெல்லாம் மற்றைய தத்துவ ஆராய்ச்சி முறைக்காக அமைக்கப் பட்டிருப்பதைச் சைவ ஆராய்ச்சியறிஞர் தெள்ளிய சிவஞானத்தால் தெளிக. தமிழ் நாட்டு அறிவு என்ற ஞான ஆராய்ச்சி யோக முறைகளுக்குத் தடையாயிருந்த பார்ப்பனீய வடமொழி இன்னும் தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் வளர்ச்சித் தடையா யிருந்து சோற்றுக் கூச்சலாகிய பாராயணங்கள் பழகிவிந்தால் ஞான ஆராய்ச்சி ஏற்படுமா? நாட்டுச் சோம்பேறித்தனம் செத்து செல்வ வளர்ச்சி உண்டாகுமா? அருத்தமற்ற கூச்சலில் ஏதாவது பயனுண்டா? இன்னும் நம் நாட்டுக்குப் புறம்பாகிய வடமொழியில் மயக்கம் தமிழ் மக்களுக்குத் தீர்ந்தபாடில்லை. வடமொழியானது தேவ பாஷை என்று ஏமாற்றி, பார்ப்பன வல்லவனுகியவன், தெர்ப்பை என்ற புல்லை ஆயுதமாகக் கொண்டு, நாட்டைச் சீர்கெடுக்கும் ஏமாற்றத்தைச் சைவமென்ற ஞானமுடைய தமிழ் மக்களுந் தெரிந்து கொண்டார்களில்லை. தமிழ்நாட்டினர் மண் என்ற நிலனாராய்ச்சி செய்து உழவுக் கலையால் நாட்டுக்குதவிய உழுந்து, கடலை, காராமணி, சிறுபயறு முதலிய பொருள்களுக்கு வடமொழிப் பேர்களுண்டா என்று கேட்கிறோம். உபயோக மற்ற வடமொழி எற்றுக்கு? ஆந்திரம், மலையாளமாகிய சேரம், கன்னடம் முதலிய நாடுகள் ஏமாறியது போலத் தமிழ் நாடும் பூராவாகப் பார்ப்பனீயத்தால் ஏமாறவில்லை. தமிழ் நூல்கள் தாங்கி நிற்கும் ஞானக் கலைகளெல்லாம் வடமொழியிற் கிடையா. வடமொழி ஏமாற்றம் மாண்டு மடியட்டும். அதில் ஏதாவது இருந்தால் வடமொழிகற்ற ஒருவர் இருவர் தமிழில் மொழி பெயர்க்கட்டும். சர்க்காரும் வடமொழிக்காக உதவும் பணத்தையெல்லாம் தமிழ்க் கலைகளுக்குச் செலவிடுவார்களாக. வட மொழிக்காகத் தமிழ் மக்கள் பணம் எவ்வளவு செலவாகிறது என்று கணக்குப் பார்த்துத் தெளிந்து, வடமொழி பெயர்ப்பு மன்றத்துக்கு மட்டும் சிறிது கொடுத்துவிட்டு வடமொழியை வடக்கே ஓட்டுவது தமிழ் மக்கள் கடனாகும். பார்ப்பனீய ஆதிக்கத்துக்கும் வடமொழி காரணம் என்பதைத் தமிழ் நாட்டுத் தலைவர்களும், தமிழ்நாட்டு நலனைத் தேடுபவரும் உணர்ந்து நல்ல முறைகளைக் கையாண்டு பார்ப்பனரல்லாத தமிழ் மக்களது நன்மையைக் கருதுவாராக.

---

சுதேசத் தொழில்
சிமிண்டினல்
சித்திர வேலை செய்த
பலதினுசு
## பரப்புக் கற்கள்.

கிடைக்குமிடம்:—
லெக்ஷ்மி டைல் ஒர்க்ஸ்,
(412) புதுக்கோட்டை

---



---

## பார்ப்பனீயத்தை ஒழியுங்கள்.

### அருப்புக்கோட்டை.

**இராமனுதபுரம் ஜில்லா கிராமப் பஞ்சாயத்து முதலாவது மகாநாடு.**

(நமது சொந்த நிருபர்)

இராமநாதபுரம் ஜில்லா கிராமப் பஞ்சாயத்து முதலாவது மகாநாடு ௨௬-௪-௨௯-ல் இந்நகர் பிரின்ஸ் ஆப் வேல்ஸ் ஸ்கூலில் அமைக்கப்பெற்றிருந்த சிங்காரப்பந்தலில் காலை ௧௦-மணிக்கு ஆரம்பமாயிற்று. ௧௧-௩௦ மணிக்கு மகாநாட்டுத்தலைவர் திரு. சௌந்தரபாண்டியர் (எம். எல். ஸி. இராமனுதபுரம் ஜில்லா போர்டு தலைவர்) அவர்கள், மூசாவரிபங்களா வந்துசேர்ந்தனர். வரவேற்புக்கமிட்டிச் சேர்மன் திரு. கோபால கிருஷ்ணசாமி நாயக்கர் அவர்கள் வரவேற்றுபசரித்தனர். அவ்வமயம் விருதுநகர் மு. ச. பெ. செந்தில்குமார நாடார் லோகநாத முதலியார் (இராமநாதபுரம் ஜில்லா அஸிஸ்டெண்ட் இன்ஜினீயர்) நகரசபைச் சேர்மன், சாலியர் மகாஜன சங்கம் காரியதரிசி சுந்தரமகாலிங்கம், குருசாமிக்குடும்பர் யூனியன் போர்டு மெம்பர், முத்துநாடார் (நாடார் குலமித்திரன் அதிபர்) ஆகியவர்கள் விஜயம் செய்திருந்தவர்களில் முக்கியமானவர். பின் தலைவர் அவர்கள் மேளவாத்திய கோஷங்களுடன் மகாநாட்டுப் பந்தலுக்கழைத்துச் செல்லப்பட்டதும் மாணவர்கள் வரவேற்புப்பாடல் பாடினர், தலைவருக்கு உபசாரப்பத்திரம் ஒன்று வாசித்தளிக்கப்பட்டது. பின் தலைவர் முன்னுரையாக கிராமபஞ்சாயத்துகளின் அவசியம் குறித்தும் பஞ்சாயத்து விஷயங்களில் தானும் மற்ற நகரவாசிகளும் போதியவேலை செய்வதாகவும் கூறி நீண்டதோர் சொற்பெருக்கு நிகழ்த்தினர். பின் பஞ்சாயத்துகளின் முன்னேற்றங்கருதி ௩௦ தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தலைவர் முடிவுரை கூறியதும் திரு. ஆனந்தராவ் அவர்களால் வந்தனம் கூறி புஷ்பஹாரம் சூடப்பெற்று மாலை ௬-௩௦ க்கு மகாநாடு முடிவுற்றது.

### கண்டனூர்.

(நமது நிருபரிமிருந்து)

ஹோம் டோர்னமெண்ட்:— இவ்வூர் முருகர் விலாஸ் டந்தடிமாவின் ஹோம் டோர்னமெண்டு சில தினங்களாக நடைபெற்று வந்தது. அதன் முடிவான விளையாட்டு சித்திரை ௧௦-உ காலையில் நடைபெற்றது. அதில் வெற்றி பெற்ற திருவாளர்களான ராம. அருணாசலன், ச. சத்தியமூர்த்தி ஆகியவர்களுக்குப் பந்தடி மட்டைகளும், தோல்வியுற்ற திருவாளர்களான அரு. பழனியப்பன், பெரி. முத்தையா ஆகியவர்களுக்கு கட்சுகளும் பாட்மிண்டன் விளப்பிலிருந்து அளிக்கப்பட்டன.

பெருமாள்கோவில்:— சி. செ. வீர. குடும்பத்தாரால் வயி. அ. ராம. பிள்ளையார் கோவிலுக்குச் சமீபத்தில் பெருமாள் கோவில் கட்டுவதற்காக இடம் வாங்கப்பெற்று கர்டு வெட்டி சுத்தம்செய்யப் பெற்றிருக்கிறது. வைகாசிமீ வேலை ஆரம்பிக்கப் படுமெனத் தெரிகிறது.

### நீல்சிலை சத்தியாக்கிரகி விடுதலை செய்யப்பட்டார்.

சென்னை நீல்சிலை சத்தியாக்கிரகத்தை யொட்டி இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனை பெற்ற திரு. திருவேங்கடம் தண்டனை காலம் முற்றுப்பெற நான்கு மாத காலமிருக்கும் பொழுதே, ஏப்ரல் ௨௫-ம் தேதி விடுதலை செய்யப்பட்டார்.

---



## ரப்பர் செய்திகள்.

மலாய்நாட்டில் உள்ள ரப்பர் தோட்டங்களில் அதிகமான ரப்பர் உற்பத்தி ஏற்பட்டும் அமெரிக்காவில் நடந்து வரும் அதிகச் செலவுகளுக்கு ஈடாகப்போய்க் கொண்டும் இன்னும் கொஞ்சகாலத்திற்கு இதே மாதிரியிருக்கக் கூடுமென்றும் நாம் கூறியிருந்தோமல்லவா? அமெரிக்கப் பத்திரிகையொன்றில் மிஸ்டர் ஜான்ஸ்டன் என்பார் எழுதவதில் ஒவ்வொரு ரப்பர் தோட்டமும் ரப்பர் உற்பத்தியைத் தங்களுடைய முழு சக்தியளவுக்கு நடத்திவர வேண்டுமென்றும் தேவையான ரப்பரை அனுப்ப வேண்டும் கூறுகின்றார். உலகத்தில் அமெரிக்கர்களே அதிகப்படியான மோட்டார்களை வைத்துக்கொண்டிருக்கின்றனரென்று அவர் கூறுகிறார். அமெரிக்கர்களே மோட்டார் தொழிலையும் அதிகமாக மேற்கொண்டிருக்கின்றனர். ஆகையால் மூன்றில் இரண்டு பங்கு ரப்பரை அவர்களே உபயோகித்துக் கொள்ளுகின்றனர். இதனால் அவர்களுக்கு ரப்பர் புள்ளி விபரங்களில் மிகுந்த சிரத்தையுண்டு. அவ்விபரங்களைக்கொண்டு அவர்கள் ஒவ்வொரு தோட்டமும் தங்களுடைய முழு சக்தியளவுக்குப் பால்வெட்டுகள் நடத்தவேண்டுமென்று கூறுகின்றனர். இன்றேல் ரப்பர் குறைவு ஏற்படுமாம். இதற்கு உதாரணம் அவர் கூறும்பொழுது, சென்ற வருடத்தில் ஸ்டீவன்ஸனின் ரப்பர் கட்டுப்பாடு எடுக்கப்பட்ட காலத்து ௧௯௨௭-ம் வருடத்தில் ஏராளமாக ரப்பர் இருப்புகள் இருக்கக் கூடுமென்று எதிர் பார்க்கப்பட்டதென்றும், ஆனால் ௧௯௨௮-ம் வருட முடிவில் நிலைமைகள் மாறி விட்டதென்றும் அதில் முக்கியமாய்க் கட்டுப்பாடு இருந்த வருடங்களில் செலவு அதிகமாகிக்கொண்டே வந்தபோதிலும், புது மரங்கள் சொற்பமாகவே, மிகச்சொற்பமாகவே நடப்பட்டு வந்தசாகவும் கூறுகிறார்: இதை நாம் முழுதும் ஒப்புக்கொள்ளவேண்டியது தான். நாம் முன்னர் அனேக முறைகள் ரப்பரைப்பற்றி எழுதியுள்ள காலத்து விலை குறைந்த காலங்களிலெல்லாம் இந்நாட்டில் ரப்பர் மரங்கள் புதிதாக நடப்படவில்லை யென்று கூறியுள்ளோம் இப்பொழுதும் புது மரங்கள் பயிராக்கப்படுவதேயில்லை. ஆறு வருடங்களுக்கு முன்னர் பயிராக்கப்பட்ட அதிகப்படியான ரப்பர் மரங்களினின்றும் கிடைக்கும் பால்வெட்டுகள், வருடந்தோறும் அதிகமாகிக்கொண்டே வந்துள்ள செலவுகளுக்கு சரியாகப்போய் விடுகிறது. சென்ற வருடம் செலவுக்குமேல் சாதாரணமாக நூற்றுக்குப் பத்து விகிதம் இவ்வருட செலவு ஏற்படுமென்று வைத்துக் கொண்டோமானால் உலக முழுவதும் ௧௯௨௯ம் வருடத்தில் சுமார் ௭௩௫,௦௦௦டன்கள் ரப்பர் செலவழியுமென்று எதிர் பார்க்கக்கூடும். மேலும் மிஸ்டர் ஜான்ஸ்டன் கூறுவதில் இவ் வருடத்தில் அமெரிக்க மோட்டார் தொழிலுக்கு உலகத்தில் உற்பத்தி செய்யப்படும் ரப்பர் முழுவதும் தேவையாயிருக்குமென்று கூறுகிறார். அவர் எழுதுவதாவது:—

"௧௯௨௯-ம் வருடத்தில் டியூப்களுக்கும் மற்றவைகளுக்குமாக ௩௪௦,௦௦௦ டன்கள் க்ரூடு ரப்பர் உபயோகிக்கப்படும். அல்லது தொழிற் பூராவுக்கும் ஏறக்குறைய ௪௬௫,௦௦௦ டன்கள் செலவழிக்கப்படும். ரப்பர் கேஸ்களுக்கும் டியூப்களுக்கும் பெரும்பாலான ரப்பர் உபயோகப் படுத்தப் படுகிறது. ஒவ்வொரு கேசுக்கும் கால் பவுண்டு ரப்பரை அதிகமாக்கி விட்டால் அமெரிக்கன் ரப்பர் தொழில் பூராவிற்கும் சுமார் ௪௬௫,௦௦௦ டன்கள் தேவையாயிருக்கும். இதில் நூற்றுக்கு ௧௦ விகிதம் உலகத்தின் மற்ற பாகங்களில் செலவு ஏற்படுவதாகக் கொண்டால் உலகச் செலவு சுமார் ௭௨௦,௨௦௦௦ டன்களாகும். இக்கணக்கு விபரங்களெல்லாம் புதிதாகக் கட்டப்படும் மோட்டார் ரதங்களைப் பொறுத்ததாகும். இனிமேல் இருப்புகளைப்பற்றி எடுத்துக் கொள்வோம். டிசம்பர் மாதம் ௩௧-உ யன்று மொத்த இருப்புகள் ௨௪௦,௦௦௦ டன்களுக்கு மேல் கிடையாது. இவைகள் பின்வருமாறு பிரிக்கப்பட்டிருந்தன: உற்பத்தி ஸ்தானங்களில் ௫௦,௦௦௦ டன்கள். தொழிற்சாலைகளிலும் கப்பல்களிலும் ஏற்றுமதி துறைகளிலும் ௧௩௦,௦௦௦ டன்கள் ௧௯௨௮-ம் வருடத்தில் செலவு தாராதம்மியத்தின்படி இவைகள் சுமார் மாதங்களுக்கே காணக்கூடியதாயிருந்தன. ௧௯௨௯-ம் வருடத்தில் ௨௮-ம் வருடத்தைக் காட்டிலும் ௧௦-விகிதம் செலவு அதிகரிக்குமென்று எடுத்துக்கொண்டால் கூடிய சீக்கிரத்தில் ரப்பர் குறைவு ஏற்படுமென்பதில் ஆக்ஷேபனையில்லை. சென்ற வருடத்தைக் காட்டிலும் செலவுகள் அதிகமாயின் நிச்சயமாக ரப்பர் விலை ஏறும்"

மலாய் நாட்டுக்கு ரப்பர் தொழில் உயிர் நிலை போன்றது. நாட்டு வாசிகளும் அதனை நம்பியே இருக்கின்றனர். அவர்கள் மிஸ்டர் ஜான்சன் கூறுவது யாவும் உண்மையென்று கண்டு கொள்வார்கள். வியாபாரத் துறையில் எவ்விதத் தடங்கல்களும் நேரிடாதிருக்குமாயின் வெகு துரிதத்திலேயே ரப்பர் நல்ல நிலைமைக்கு வந்து விடுமென்று நம்புகிறோமென "டைம்ஸ்" பத்திரிகை கூறுகின்றது.

(தமிழ்நேசன்)

---

**வியாபாரத்திற்கழகு விளம்பரமே.**



### வேலையில்லாத் திண்டாட்டம்.

**இளைஞனின் தற்கொலை.**

மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறிய ஒரு வங்காள வாலிபன் வேலையில்லாத் திண்டாட்டத்தால் மனச்சோர்வடைந்து, தனது வீட்டின் ௨-வது மாடியிலிருந்து கீழே குதித்து உயிர் நீத்தானெனக் கல்கத்தாச் செய்தி கூறுகிறது.

### முத்தமிடும் பாம்புகள்.

பகவல்பூர் சமஸ்தானத்தில் ஒருவிதப் பாம்புகளிருக்கின்றனவாம். இவை மனிதரை முத்தமிட்டு அவர்கள் வாயில் விஷத்தைக் கக்கிவிடுவதால் அவர்கள் விஷத் தலைக்கேறி உயிர் துறக்கின்றனராம். படுத்துறங்குபவர்களுடைய தடி, செருப்பு முதலியவற்றை முதலில் அப்புறப்படுத்திவிட்டு அவர்கள் முகத்திலேறி வாயில் பல முறை முத்தமிடுகின்றனவாம். இப்படிச் செய்யும்போது தூங்குபவர்களுடைய வாயில் விஷம் சென்று விடுகின்றதென்றும், அப்பால் அது தன் வாலால் படுத்திருக்கும் மனிதனை அடித்து எழுப்பிவிட்டு ஓடிவிடுகிறதென்றும் சொல்லப்படுகிறது. விஷம் இனிப்பான சுவையுடையதாம். விஷத்தை விழுங்கியவன் மீள்வது சாத்தியமில்லை. வாந்தி எடுத்து விஷத்தை வெளியேற்றினால் பிழைக்கலாம் எனக் கூறப்படுகிறது.

### செயங்கொண்டபுரம்.

மாணவர்கூட்டம்:— இத்திங்கள் ௭-ம் நான்மாலை இவ்வூர் ஐயனார் ஆலயத்திற்கு முன் இராமநாதன் கலாசாலை மாணவர்களால் ஓர் கூட்டம் நடத்தப்பெற்றது. அக்கூட்டத்திற்கு இவ்வூர் கற்பகவிநாயகர் வித்தியாசாலை மாணவர்களும் ஆசிரியரும் கழனிவாசல் காந்திப் பள்ளிக்கூட மாணவர்களும் ஆசிரியரும் போந்திருந்தார்கள். எல்லா மாணவர்களும் ஒன்று சேர்ந்து தேவாரம், திருவாசகம், பாரதியார் பாடல் முதலிய பாடி எல்லா மக்களையும் மகிழ்வித்தார்கள். கூட்டத்திற்கு திரு. மணிவாசகம் தலைமை பூண்டார். இராமநாதன் கலாசாலை மாணவர்களாகிய, மணிவாசகன், நாச்சியப்பன், இலக்குமணன் முறையே, கல்வி ஒற்றுமை, தைரியம் என்னும் பொருள்கள்பற்றி எல்லாரும் உணரும்படி பேசினர்கள். மறு நாள் மாலை ராமனுதன் கலாசாலை மாணவர்களையும் ஆசிரியர்களையும் கலாசாலை அபிமானிகளையும் வைத்து காந்தி விலாசத்தில் ஒரு புகைப்படம் எடுக்கப்பட்டது எனக் கலாசாலைத் தலைமை ஆசிரியர் அறிவிக்கிறார்.

### மோட்டாரை மார்பில் ஏற்றும் சாது.

டில்லியில் சாது மாதவதாஸ் என்பவர் பாரமுள்ள மோட்டார் வண்டி தன்மீது ஏறிச்செல்லுவதைத் தாங்கிக்கொள்ளுகிறாராம். பல விடங்களில் அவர் இம்மாதிரி செய்து காட்டியிருக்கிறாராம்,

### ரங்கூனில் கொள்ளைக்காரர்கள்.

மூன்று பர்மியக் கொள்ளைக்காரர்கள், ஒரு பர்மியப் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டரைச் சுட்டு, துண்டு துண்டாக வெட்டி விட்டனராம். இதையறிந்து ஜில்லா போலீஸ் சூப்பிரின்டெண்டெண்டு பல போலீஸ்காரர்களுடன் கொள்ளைக் காரர்களைத் தேடிச் சென்றார். சில தினங்களுக்கு முன் போலீஸ்காரர்களும் கொள்ளைக் காரர்களும் சந்தித்தனர். இரு திறத்தாருக்கும் பெரும்போர் நடைபெற்றது. இரண்டு கொள்ளைக்காரர்கள் சுடப்பட்டனர். ஒருவன் உயிருடன் பிடி பட்டான்.





## செய்தித் திரட்டு.

### பட்டுக்கோட்டை.

**தமிழ் மாகாண முதலாவது சுயமரியாதைத் தொண்டர்கள் மகா நாடு.**

(வரவேற்புக் கமிட்டி கூட்டம்.)

௧௯௨௯௵ ஏப்ரல்மீ ௨௬௳ வெள்ளிக்கிழமை மாலை ௫-மணிக்கு பட்டுக்கோட்டை பனகால் அரசர் வாசகசாலைக் கட்டிடத்தில் வரவேற்புத் தலைவர் திரு ப. சு. தண்டபாணி அவர்களின் தலைமையின் கீழ் கூடியது. மகா நாட்டின் அவசியத்தைப் பற்றி மாயவரம் திரு. நடராஜன், திரு. S. K. சிதம்பரம் முதலியவர்கள் பிரசங்கம் செய்தார்கள்.

௧. தமிழ் மாகாண முதலாவது சுயமரியாதைத் தொண்டர்களின் மகா நாட்டை நிகழும் ௧௯௨௯௵ மேமீ ௨௫, ௨௬௳ பட்டுக்கோட்டையில் நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது.

௨. மகா நாட்டை 'குமரன்' ஆசிரியர் திரு. சொ. முருகப்பர் அவர்களைக்கொண்டு திறந்து வைக்கச் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது.

௩. மகா நாட்டில் திருச்சி, திரு. சி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களைக் கொண்டு சுயமரியாதைக் கொடியை உயர்த்துவிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பெற்றது.

௪. மகா நாட்டிற்கு 'ரிவோல்ட்' உதவி ஆசிரியர் திருவாளர் சா. குருசாமி அவர்கள் தலைவராக தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

௫. மகாநாட்டுப் பந்தலில் வைக்கம் வீரர் திருவுருவப் படத்தை சட்ட மெம்பர் திவான் பகதூர் கனம் கிருஷ்ண நாயர் அவர்களைக்கொண்டு திறந்து வைப்பதென்றும், அவ்விழாவிற்கு சென்னை சுகாதாரமந்திரி கனம் S. முத்தையா அவர்கள் தலைமை வகிக்கக்கேட்டுக் கொள்வதென்றும் முடிவு செய்யப்பட்டது.

௬. மகா நாட்டுப்பந்தலில் உயர்திரு. கைவல்ய சாமியார் அவர்களின் திரு உருவப் படத்தைப்பட்டுக்கோட்டை திரு. அழகர்சாமி அவர்களைக்கொண்டு திறந்து வைப்பதென்றும் அவ்விழாவிற்கு திரு. சாமி சிதம்பரனர் அவர்களைத் தலைமை வகிக்கக் கேட்டுக்கொள்வதென்றும் முடிவு செய்யப்பட்டது.

௭. மகா நாட்டிற்கு வரவேற்புக் கட்டணம் ரூ ௫. ஆகவும், பிரதிநிதிக்கட்டணம் ரூ. ௨ ஆகவும் தீர்மானிக்கப்பட்டன. விசிட்டர்களின் கட்டணத்தை நிர்ணயித்துக்கொள்ளக் காரியக்கமிட்டிக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது.

௮. மாதர்களை மகாநாட்டில் இலவசமாக அனுமதிக்கவேண்டும் என்று தீர்மானிக்கப்பெற்றது.

௯. பண வசூல் கமிட்டி, பந்தல் கமிட்டி, போஜன வசதிக்கமிட்டி, அலங்காரக் கமிட்டி முதலிய தனி சப் கமிட்டிகளுக்கு அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இறுதியில் திரு. தி. ல. திருஞான சம்பந்தரால் வந்தனோபசாரம் கூறப்பட்டு கூட்டம் முடிவடைந்தது என விளம்பர அதிகாரி பட்டுக்கோட்டை திரு. ரா. சௌரிராஜன் அறிவிக்கிறார்.

---

### லண்டன்–கராச்சி விமான யாத்திரை.

பிரிட்டிஷ் ஆகாயப் படைவிமானமொன்று ௫௦ மணி ௩௮ நிமிட நேரத்தில் ௪௧௩௦ மைல் பிரயாணஞ் செய்து லண்டனிலிருந்து காராச்சி வந்து சேர்ந்தது.

### பர்டோலிப்போர்.

**விசாரணைக்கமிட்டியின் சிபார்சுகள்.**

**விவசாயிகளின் வெற்றி.**

பர்டோலியில் வரி கொடா இயக்கம் நடைபெற்றபோது, வரி உயர்த்தப்பட்டதைக் குறித்து விசாரணை செய்ய நியமிக்கப்பட்ட ப்ரும்பீல்டு கமிட்டி தன் வேலையை முடித்துக்கொண்டு கவர்ன்மெண்டுக்கு ரிப்போர்ட் அனுப்பிவிட்டதாக 'பயோனியர்' பத்திரிகையின் பம்பாய் நிருபர் அப்பத்திரிகையில் வரைந்திருக்கிறார். பர்டோலி விவசாயிகளுடைய குறைகள் நியாயமானவைகளெனக் கமிட்டியார் ஏகோபித்து அறிவித்திருக்கின்றார்களாம். எனினும் ஒரு சில்லரை பிரச்னை அகில இந்திய பிரச்னையாக ஆக்கப்பட்டுவிட்டது சரியல்ல வென்றும் தெரிவித்திருக்கின்றார்களாம், பழைய விகிதத்தையே அனுஷ்டிக்கவேண்டு மென்றும், புதிய விகிதத்தைத் தள்ளிவிட வேண்டுமென்றும் தங்கள் முடிவைக் கூறியிருக்கிறார்கள்.

---

### சட்டசபைத் தேர்தல்.

வரப்போகும் சென்னை சட்டசபைத் தேர்தலில், முதல் மந்திரி கனம் டாக்டர் சுப்பராயன் அவர்களின் மனைவியார் ஸ்ரீமதி குமாரமங்கலம் ஜமீன்தாரினி அவர்கள் திலச்சுவாங்கள் தொகுதிக்காக நிற்பார்களென 'மதராஸ் மெயில்' பத்திரிகை கூறுகிறது.

### ராயவரம்.

திருவிழா:—இவ்வூர் ஸ்ரீ முத்துமாரி அம்மாளுக்கு சித்திரை ௨௬-ம் தேதி சோமவாரத்தன்று காப்புக்கட்டி உர்சவம் நடைபெறுமென்றும், மூன்றாம் திருவிழா முதல் பெரம்பலூர் அங்கப்பன் நாதசுரமும் பஞ்சாபி தவுலும் நடைபெறுமென்றும் ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

### மதுரை தாலூகா இரண்டாவது அரசியல் மகாநாடு.

மதுரை தாலூகா இரண்டாவது அரசியல் மகாநாடு சித்திரை ௨௭-ம் தேதி சனிக்கிழமை, சென்னை திரு. S. சீனிவாசய்யங்கார் அவர்கள் தலைமையில் திருப்பரங்குன்றம் ரதவீதி, திருமங்கலம் நாடார்கள் பெரிய மடத்தில் நடைபெறும் திரு. இராஜாராம் பாண்டியன் அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைப்பார்களென்றும், திரு. வி. யன். முத்துரங்க முதலியார் எம். எல். ஸி. அவர்கள் தேசியக்கொடியை உயர்த்துவார்களென்றும் அறிவிக்கப்படுகிறது. அன்று காலை மேற்படி இடத்தில் நீல்சிலை சத்தியாக்கிரகி திரு. ந. சோமயாஜுலு அவர்கள் தலைமையில் முதலாவது தொண்டர் மகாநாடும் நடைபெறும்.

### ஸ்ரீமதி சரோஜனி தேவி

அமெரிக்கா சென்றிருந்த ஸ்ரீமதி சரோஜினி தேவி ஏப்ரல் ௨௦-ம் தேதி இங்கிலாந்துக்குப் பிரயாணமானார்.

யுனைடெட் ஸ்டேட்டிலும் கானடாவிலுமாக சுமார் ௨௦௦ கூட்டங்களில் அவர் பிரசங்கஞ் செய்திருக்கிறார்.

### பெண்கள் ஓட்டுரிமை இயக்கத் தலைவருக்கு உருவச்சிலை.

பெண்களுக்கும் ஓட்டுரிமை அளிக்க வேண்டுமென்ற இயக்கத் தலைவர் மிஸஸ் பாங்கர்ஸ்டுக்கு இங்கிலாந்தில் உருவச்சிலை ஏற்படுத்த, மராமத்திலாகா மந்திரி ஒரு மனையை இனமாக அளித்திருக்கிறார்.

### ஜப்பானியத் தொழிற்சாலைகளில் பெண்கள்.

ஜப்பான் தேசத்துத் தொழிற்சாலைகளில் ஆண்களைவிடப் பெண்களே அதிகமாக வேலை பார்க்கின்றனர் என்பது பம்பாய் 'லேபர் கெஜட்'டில் வெளியாயிருக்கும் விஷயங்களிலிருந்து தெரிகிறது.

௧௯௨௭-ம் வருடத்து முடிவில் ௩,௦௦௯,௫௫௦ பெண்கள் தொழிற்சாலைகளில் வேலை செய்தவர்களாவர். இவர்களில் ௧௨௮,௪௧௧ பேர் தொழிற்சாலைச் சட்டத்தின் பாதுகாப்பற்றவர்கள். ஏனெனில், பத்துத் தொழிலாளர்களுக்குக் குறைவான ஆட்களை வேலை வாங்கும் தொழிற்சாலைகளிலேயே இவர்கள் வேலைபார்த்து வந்தனர். தொழிற்சாலைகளில் வேலைக்கெடுத்துக் கொள்ளப்படும் குழந்தைகளின் வயது குறைந்தது பதினொன்றாகும். இச்சட்டத்தை மீறி நடப்பவருக்கு ௫௦௦௦ 'என்'கள் வரை அபராதம் விதிக்கப்படலாம்.

### சுரங்கங்கள்.

௧௯௨௭-ல் சுரங்கங்களில் ௩௪,௨௩௫ பெண் வேலைசெய்து வந்தனர். இது ஆண்கள் தொகையில் மூன்றிலொன்றாகும்.

---

# நமது தபால்பெட்டி.

## மதுரை.

(நமது சொந்த நிருபர்)

உற்சவங்கள்:— சைத்திர உற்சவத்தை யொட்டி மதுரைக் கோவிலில் நடைபெற்ற திருவிழாக்களில், பட்டாபிஷேகத்திற்கு, அம்மன் கையில் செங்கோல் கொடுக்கும் போது கோவிலில் போட்டிருந்த மின்சார விளக்குகள் அணைந்துவிட்டனவாம். திருக்கல்யாணத்தன்று இரவு, மீனாக்ஷியும் சொக்கநாதரும், கோவிலை விட்டுப் புறப்பட்டு, கொஞ்ச தூரம் சென்றதும் பலமான மழையினால் மற்ற இடங்களுக்குப் போகாமல், அம்மனும் சாமியும் இரவு, உ-௩0 மணி சமாருக்கு கோவிலுக்குத் திரும்பிக் கொண்டு போகப்பட்டனர். இதுபோன்ற சம்பவம் எப்போதும் நடக்கதில்லையாம். மறுநாள் தேர் புறப்பட்டு (சாமி தேர்) தெற்கு மாசி வீதியில் நின்றுவிட்டது. எவ்வளவோ பிரயாசை எடுத்தும் இழுக்க முடியவில்லை. கடைசியில் மறுநாள்தான் இழுக்க முடிந்து, தன் ஸ்தானத்துக்கு வந்தது. மறுநாள் உ௬-௪-உ௬ தேதி, ஸ்ரீ கள்ளழகர் வைகையில் எழுந்தருளினார். ஆனால் வைகையில் ஏராளமான தண்ணீர் போய்க்கொண்டிருந்தபடியால், நதியில் நின்று ஜனங்கள் பார்க்கக் கூடவில்லை. அன்று இரவு சாமி வண்டியூருக்குப் போய் மறுநாள் மண்டூக முனிக்கு முக்தி கொடுப்பதென்ற சம்பிரதாயமாம். வண்டியூருக்குப் போய்ச் சேருமுன் ஆற்றுத் தண்ணீரில் சுவாமியும் மக்களும் பட்ட கஷ்டம் சொல்ல முடியாது. சாமியைக் கரையோரமாகத் தூக்கி வரும் போது திடீரென வெள்ளம் வந்துவிட்டது. நல்ல வேளையாக எல்லோரும் தப்புவிக்கப் பட்டார்கள். மறுநாள், உ௬-௪-உ௬ தேதி வண்டியூரிலிருந்து தேனூர் மண்டபத்துக்குச் செல்லவில்லை. மற்ற ஐதிகங்களெல்லாம் நடைபெற்றனவாம். சாமி ஆற்றில் இறங்கி வரமுடியாதபடி தண்ணீர் வந்து கொண்டிருந்தது. பாதையும் சரியானபடி இல்லை. தோப்புகளுக்குப் புதிதாக பாதை ஏற்படுத்தி அதன் மூலமாகவும், அதற்குப்பின்புறமுள்ள ரோடு மூலமாகவும் சாமியை எடுத்துச்சென்றார்கள். இவ்வருடம் ஏராளமான கூட்டம் வந்திருந்தும், அவர்களுக்குப் போதிய சௌகரியமில்லாததால் பலர் ஊருக்குப் போய் விட்டார்கள். இதுபோன்ற சம்பவங்கள் எப்போதும் நடைபெறவில்லை யென்று சொல்லப்படுகிறது. மதுரை முனிசிபாலிட்டியாரும், போலீசும், ஜனங்களுக்கு வேண்டிய உதவி செய்து வந்தார்கள்.

நாடகம்:— மதுரை லோக்கல் பண்டு ரிகிரியேஷன் கிளப்பின் பணஉதவிக்காக மதுரை டிஸ்ட்ரிக் போர்டு டிராமாடிக் கிளப் சபையாரால் பெரிய தகரக் கொட்டகையில் உ௪-௪-உ௬ தேதி "நந்தனார்" எனும் நாடகத்தை நடாத்திக் காண்பிக்கப் பட்டது.

கிரிமினல் வழக்கு:—மதுரை கோவில் டிரஸ்டி கக்ஷஉ௪-ம் வருடம் நடந்த கும்பாபிஷேக சம்பந்தமாக வாங்கிய பணத்திற்கு சரியானபடி வவுச்சர்கள் கொடுக்கவில்லை யென்ற காரணத்திற்காக திரு. மருதமுத்து பிள்ளை சப்மாஜிஸ்திரேட் கோர்ட்டில் வழக்கு தொடர்ந்திருக்கிறார்.

மகா நாடு:—மதுரை வைசிய வாலிபர் சங்க மகா நாடு உ0-௪-உக தேதி மதுரை டிஸ்திரிக்டு ஜட்ஜ் திரு. கெ. எல். இராமசாமி சாஸ்திரிகள் தலைமையின் கீழ் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருவாளர்கள் எஸ். எஸ். பாரதி, என். ஆர். கிருஷ்ணசாமி அய்யங்கார், சுந்தரம் செட்டியார் ஆகியவர்கள் சிறந்த சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பின்னர் வந்தனோபசாரத்துடன் கூட்டம் கலைவுற்றது.

வக்கீல் குமாஸ்தாக்கள் மகாநாடு:— மதுரை வக்கீல் குமாஸ்தாக்கள் மகா நாடானது உ0—௪—உக தேதி, திருமலை நாயக்கர் மஹாலில் இராமநாதபுரம் டிஸ்திரிக்டு ஜட்ஜ் திரு. கெ.எஸ். இராமசாமி சாஸ்திரி அவர்கள் தலைமையில் கூடிற்று.

ஆலயப் பிரவேசக் கூட்டம்:—மதுரை சமத்துவ விளம்பர சபையின் ஆதரவில் உ0-௪-உக தேதி மாலை ௬ மணிக்கு மேங்காட்டு பொட்டல் தெருவில் திரு. எ. எஸ். இராமய்யர் (மாஜி முனிஸிபல் கவுன்சிலர்) தலைமையின் கீழ் ஒரு கூட்டம் கூடிற்று. அது சமயம் திருவாளர்கள் டி. நாராயணன் பி.எ.பி.எல்.எ. எஸ். ஆனந்தம். எ. எஸ் அருணாசலம் வ. திருமலையப்பன் முதலியவர்கள் ஹிந்துக்களென்று சொல்லப்படுவோர் அனைவரும் கோவிலுக்குள்போக உரிமையுடையவர்கள் என்பதுபற்றி நீண்ட நேரம் பேசினார். இக்கூட்டம் கூடுவதற்கு முன் வெளியான தண்டுப் பிரசுரங்களைக் கண்ட எதிர் கட்சியார் உண்மைக்கு மாறுகப் பல பொய் சமாசாரங்களைக் மக்களிடையே பரப்பி விட்டார்கள். எனினும் கூட்டம் சிறப்பாக நடைபெற்றது. எதிரிகள் பொய்யாககூறின வார்த்தைகளைப் பொது மக்கள் நம்பவில்லை. திருவிழா தீர்ந்ததும் தொடர்ச்சியாகப் பொதுக்கூட்டங்கள் நடைபெறுமென்று சொல்லப்படுகிறது.

## அய்மேன்.

ஷண்முகானந்த சங்கம்:—சென்ற பங்குனித்திங்கள் ௩0-ம் நாள் நமது ஷண்முகானந்த சங்கத்தின் முதலாவதாண்டு நான்காம் நிலைக்கூட்டம் அ. க. அ. அழகடை அதிபரும் சங்கத் தலைவருமான திரு நாகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் இரவு ௬-மணிக்குக் கூடிற்று. கடவுள் வணக்கம் பாடப்பட்டதும், திருவாளர்களான, ஆர். இராமநாதன், அழ. சுந்தராஜன், என். ஷண்முகம்பிள்ளை, ஆர். எம். சேதுராமன், அண்ணாமலை முதலியவர்கள், முறையே சங்கத்தின் பயன், கடவுள் வழிபாடு, குறளின் மகிமை, ஈவரூடல், ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர் என்பன பற்றி அழகாகச் சொற்பெருக்கிட்டார்கள். தலைவரவர்கள் முடிவுரை நிகழ்த்தினார்கள்.

பின், சித. முரு. கடை அதிபர் திருவாளர் காசிநாதஞ் செட்டியாரவர்கள் தாய்நாடு செல்வதை முன்னிட்டுச் சங்கத்தின் சார்பாக அவர்களுக்கு ஓர்பிரிவுபசாரம் பத்திரம் வாசித்துக்கொடுக்கப்பட்டது. பின் வாழ்த்துப்பாட இரவு ௧௧-மணிக்குச் சபை இனிது நிறைவெய்தியது.

வருடப்பிறப்பு:—புது வருடப் பிறப்பன்று மாலை ௫-மணிக்கு நமது சங்கத்தில் புவனகிரி ஸ்ரீ அருணாசலஞ் செட்டியாரவர்களால் பக்தி ரசந்ததும்பும் வண்ணம் திருவிளையாடற் புராணம், திருமுகங்கொடுத்த படலம் வாசிக்கப்பட்டு எ-மணிக்குச் சபை இனிது கலைந்தது.

சம்பாவனை:—சித. முரு. கடை அதிபர், தேவகோட்டை பெரி. செ. மு. காசிநாதஞ் செட்டியாரவர்கள், தாய் நாடு செல்வதை முன்னிட்டு நமது சங்கத்திற்கு நூ௰க அன்புடன் நன்கொடை யளித்தார்கள். அவர்களுக்கு நமது மனமார்ந்த நன்றி உரியதாகுக எனக்காரியதரிசி ஆர். இராமநாதம் அறிவிக்கிறார்.

## ஆரணி

(வட ஆற்காடு)

வருடாந்த மகா நாடு:-சமரச சன்மார்க்க சங்கத்தின் ௪உ-ம் வருட மகா நாடு, திருநாவுக்கரசு சுவாமிகள் மடாலயத்தில், சித்திரை, உ0, உக-ம் நாட்களில், சென்னை 'நவசக்தி' ஆசிரியர் திரு. வி. கல்யாண சுந்தர முதலியாரவர்கள் தலைமையிலும், உஉ-உ௩ம் நாட்களில், திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, யம். ஏ. பி. யல். அவர்கள் தலைமையிலும் நடைபெறும். அவ்வமயம் பல புலவர் பெருமக்கள் விரிவுரை நிகழ்த்துவார்கள் எனக்காரியதரிசி அறிவிக்கிறார்.

## திருவம்பர் மாகாளம்.

ஸோமயாக மகோற்சவம்:—நன்னிலந் தாலூகா திருவம்பர் மாகாளமென்னும் கோயிற்றிரு மாகாள க்ஷேத்திரத்தில் சித்திரை ௩௯-ம் தேதி முதல் ஸ்ரீ ஸோமயாஜியார நாயனார் ஸோமயாகஞ் செய்து முத்தியடைந்த உச்ஸவம் வெகு விமரிசையாய் நடைபெறும் என மேற்படி தேவஸ்தானத் தர்மகர்த்தர்களாலறிவிக்கப்படுகிறது.

## திருப்பாதிரிப்புலியூர்.

பிரமோற்சவம்:-இவ்வூரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பாடலேசருக்கும், ஸ்ரீ பெரியநாயகியாருக்கும் சித்திரை ௩௯-முதல் வைகாசி ௧௰வரை பிரமோற்சவம் நடைபெறும். வைகாசி ௬-ம் தேதியன்று எலக்டிரிக்தீபத்துடன் வெள்ளி ரதத்திலும் தங்கப்பல்லக்கிலும் சுவாமி எழுந்தருளப்பெறுவார். வைகாசி அ-ம் தேதி செவ்வாய்க்கிழமை இரவு தங்கக் கைலாச வாகனத்தில் சுவாமி எழுந்தருள்வார். ௧௩-ம் தேதி தெப்போற்சவம் நடைபெறுமென தர்மகர்த்தா திவான் பகதூர் தர்மபூஷணம் தீ நா. முத்தைய செட்டியார் F. R. A. S. (Lon) M. L. C. (புதுக்கோட்டை) அவர்களால் அறிவிக்கப்படுகிறது.

## சிவகங்கை.

இராமநாத புரம் ஜில்லா ஆதிதிராவிடர்களின் மகாநாடு:— இம்மகாநாடு உக—௪—உ௬ உ ஞாயிற்றுக் கிழமை பிற்பகல் ௫-மணிக்கு கோகலே சபா மண்டபத்தின்கண், சிவகங்கை தாலூகா போர்டு வைஸ் பிரசிடெண்டும், திராவிட சங்கத் தலைவரும், வக்கீலுமான திரு. மிது. எம். பொன்னுச்சாமி பிள்ளை யவர்களின் அக்கிராசனத்தின் கீழ் கூடியது. இம்மகாநாட்டிற்கு சுமார் ௫0 கிராமங்களிலிருந்து ஏறக்குறைய ௫00 பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். அவ்வமயம் சிவகங்கை ராஜாஸ் ஹைஸ்கூல் மாணவர்களால் கடவுள் வணக்கம் பாடப்பட்டது. மேற்படி மகாநாட்டிற்கு இராமநாதபுரம் ஜில்லா கல்விச் சபை அங்கத்தினரும் பிராமண ரல்லாதார் இயக்கத்திற்குத் தந்தையும் சிவகங்கை தாலூகா போர்டு மாஜி பிரசிடெண்டும், ஹைக்கோர்ட்டு வக்கீலுமான திருவாளர் எஸ். ராமச்சந்திரன் அவர்கள், ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் திருவாளர் என். மீனாட்சி சுந்தரம் முதலியாரவர்கள், வக்கீல் திருவாளர் ராஜா ராமச்சந்திரன் சேருவைகாரரவர்கள், சிவகங்கை வாலிப சங்கத்தலைவரும் யூனியன் போர்டு மாஜிபிரசிடெண்டுமான திருவாளர் சொ. ராம. வெங்கடாசலம் சேருவை காரரவர்கள், யூனியன் போர்டு பிரசிடெண்டு திருவாளர் வி. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், ராஜாஸ் ஹைஸ்கூல் உபாத்தியாயரும், யூனியன் போர்டு மெம்பரும், ஸ்கவுட்டு மாஸ்டருமான திருவாளர் எஸ். சோமசுந்தரம் பிள்ளையவர்கள், எஸ்டேட்டு இங்கிலீஷ் ஹெட் அக்கவுண்டெண்டும், யூனியன் போர்டு மெம்பருமான திருவாளர் ஏசுதாஸ் அவர்களும் இன்னும் அநேக பெரியார்களும் விஜயம் செய்திருந்தார்கள். பிறப்பினால் உயர்வு தாழ்வு கிடையாதென்றும், அவனவன் செய்கைக்குத் தக்கபடியே உயர்வு தாழ்வு உண்டென்றும், கள், சாராயம் முதலிய லாகிரி வஸ்துக்களையும், செத்த பிராணிகளின் மாமிஸங்களையும் இனிமேலாகிலும் சாப்பிடாமல் இருக்க வேண்டுமென்றும் ஒவ்வொரு நாளும் ஸ்நானம் செய்து உடை முதலியவைகளை சுத்தமாய் வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் அவரவர்களுக்குள்ளே இருக்கப்பட்ட வித்தியாசங்களை விட்டு விட்டு ஒற்றுமையுடனும் தைரியத்துடனும் இருக்க வேண்டுமென்றும் இன்னும் அரிய பெரிய விஷயங்களைப் பற்றியும் விரிவாக உபன்யாசங்கள் செய்து உற்சாகப் படுத்தினார்கள்.

### தீர்மானங்கள்.

நமது காருண்ய முள்ள சக்கிரவர்த்தியாருக்கு ஏற்பட்ட வியாதியை நீக்கி சுகமளித்த எல்லாம் வல்ல இறைவனுக்குத் துதி செலுத்த வேண்டுமென்று இம்மாநாடு தீர்மானிக்கிறது.

உ. சிவகங்கை மகாராஜா அவர்கள் மூன்று ஆதிதிராவிட பிள்ளைகளை ராஜாஸ் ஹைஸ்கூலிலும், மற்றொரு பையனை ஏழைமாணவர்கள் விடுதியிலும் யாதொரு வித்தியாசமின்றிச்சேர்த்து கல்வி கற்பித்து வருவதற்காக அவருக்கு நன்றி பாராட்ட வேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

௩. சிவகங்கை தெற்குச் சேரியிலுள்ள அழகர்சாமி என்ற ஆதிதிராவிட பையன் ஒருவனை தஞ்சாவூர் ஆதிதிராவிட பையன்கள் படிக்கும் விடுதியில் சேர்த்து படிக்க வைத்து வரும் மேற்படி ஜில்லா போர்டாருக்கு இச்சங்கம் நன்றி பாட்டுகிறது.

௪. கவர்ன்மெண்டு பாடசாலைகளிலும், கவர்ன்மெண்டார் அங்கீகாரம் பெற்ற பாடசாலைகளிலும், ஆதிதிராவிட பிள்ளைகளை சம்பள மில்லாமல் படிக்க வைக்க வேண்டுமென்று கவர்ன்மெண்டாரை இம்மகாநாடு மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறது.

௫. நம்முடைய சமூகத்தார்கள் கள், சாராயம் முதலிய போதை வஸ்துக்களை உபயோகிப்பதை இக் கூட்டம் மிகவும் பலமாய்க் கண்டிக்கிறது.

௬. சிவகங்கை ஜமீனில் உள்ள எஸ்டேட்டு புறம்போக்கு நிலங்களை ஏழைகளுக்கு நசர் இல்லாமல் கொடுத்து ஆதரிக்கும்படி சிவகங்கை மகாராஜா அவர்களையும், எஸ்டேட்டு கலக்டர் துரையவர்களையும் இச்சங்கம் பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறது.

எ. அருவருக்கத் தக்க செத்த பிராணிகளின் மாமிஸம் தின்பதை நிறுத்திப் புதைத்துவிட வேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

அ. சென்னை ஆதிதிராவிட மகாஜன சங்கத்தாரை நமது சங்கத்தையும் மேற்படி சங்கத்தின் ஓர் கிளைச்சங்கமாகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறது.

இச்சங்கத்தின் உத்தியோகஸ்தர்கள்:— இச்சங்கத்திற்கு பெரிய கோட்டை சேவகப் பெருமாள் அவர்கள் தலைவராகவும், கொட்ட குடி சுந்தரம் அவர்கள் உபதலைவராகவும், சிவகங்கை தெற்குச்சேரி வேதமாணிக்கம், காட்டு நெடுங்குளம் மரியசிலுவை இவ்விருவரும், முறையே காரிய தரிசியாகவும் உபகாரிய தரிசியாகவும் சபையாரால் தெரிந்தெடுக்கப் பட்டார்கள்.

கடைசியாக கனம் அக்கிராசனரவர்களால் முடிவுரை கூறப்பட்டு சிற்றுண்டி சந்தனம், தாம்பூலம் முதலியவைகள் வழங்கப் பட்டு மாலை ௫ மணி சுமாருக்கு இம்மகாநாடு கலைந்தது எனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

---

# மின்சார ரசம்

சகல வியாதிகட்கும் தேவாமிர்தம் போன்றது.

பத்தியமில்லை! அநுபான மில்லை!!

உள்ளுக்கும் மேலுக்கும் துளிகள் கணக்காக உபயோகித்து நிமிஷக் கணக்கில் குணமடையலாம்.

**விசேஷம்.**

மனிதர்கள் தலை முதல் கால் வரையில் வரும் சகல வியாதிகட்கும் மின்சார ரசத்தை உபயோகித்து ஆச்சரியகரமாக குணமடையலாம். எவ்வித ஆபத்திக்கும் உதவும்.




**டாக்டர்.**

ஒரு பாட்டில் மின்சார ரசம் கையிலிருந்துவிட்டால் ஒரு டாக்டர் நம் வீட்டில் இருப்பதுபோல தைரியமாக இருக்கலாம். ஒரே முறை பரீக்ஷியுங்கள். கைகண்ட மருந்து.

டாக்டர்களால் கைவிடப்பட்ட அநேகர் மின்சார ரசத்தினுல் உயிர் பெற்றிருக்கிருர்கள்.

ஆயிரக் கணக்கான நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்றது

இன்றைக்கே எழுதுங்கள். கேட்லாக் இனும்.

புட்டி 1-க்கு ரூ 2. தபால் சாரஜ் வேறு.

விலாசம்:— மின்சார ரசம் கம்பெனி (லிமிடெட்) சேலம்.

செட்டிமார் நாட்டில் முக்கியமான வியாபாரிகள். } மேஸர் A. V. அண்டு சன்ஸ், காரைக்குடி.

(421)

## விளம்பரம்.

எங்கள் நேசவுசாலையில் கைதேர்ந்த நேசவுகாரர்களால் தயார் செய்யப்பட்ட தினுசுகளின் விபரம்.

No. 1 3 முழம் முதல் 6 முழம் வரை பலவித கரைகள் போடப்பட்ட டைமன் துண்டு தினுசுகள்.

No. 2 பலவித சைபிஸ் பலவித ஸ்டைப் வைத்த சில்க்கு ஷர்ட்டிங் பீஸ்கள்.

No. 3 100 நிர். துகிலி 2¾ அகலம் 5 முழம் நீளம் உள்ள பலவித கரைகள் பலவித குறிகள் போடப்பட்ட துப்பட்டா தினுசுகள்.

No. 4 100 நிர். 3 வீதி அகலம் 8 முழம் நீட்டம் பலவித கரைகளும் பலவித குரிகள் போடப்பட்ட வேஷ்டி தினுசுகள்.

No. 5 அவரவர்கள் விலாசம் போட்ட ஜரிகை அங்கவஸ்திரம் ஆர்டர் பேரில் தயாருய் செய்துகொடுக்கப்படும்.

No. 6 நெசவாளிகளுக்கு வேண்டிய இப்பில் கட்டும் அரக்கு பட்டு சயர் தினுசுகள் தேவையானவர்கள் அடியில்கண்ட விலாசத்துக்கு ஆர்டர்கள் அனுப்பும்படிக் கோருகிறேம்.

M. ருமணுதன் & பிரதர்ஸ்,
நடருஜா நெசவுச்சாலை,
நாசிங்கன்பேட்டை. S. I. Ry.

(422)

**சுயமரியாதை வாழ்வே சுகவாழ்வு.**

## இரும்புப் பெட்டிகள்.

உங்களுடைய விலைபெற்ற பொருள்களைப் பத்திரப்படுத்துங்கள் அதற்கு நயமான இரும்புப் பெட்டி ஒன்று அவசியமல்லவா? எங்களால் கனத்த தகட்டில் செய்யப்பெற்ற கெட்டியான இரும்புப் பெட்டிகள் அழகான வர்ணம் வைக்கப்பெற்றுத் தயாரிலிருக்கின்றன. அதில் ஒன்று வாங்கிவிட்டீர்களானுல் திருட்டுக்கும் நெருப்பிற்கும் பயம்இல்லை.



மு. அ. & அ. நா. அ.
இராமசாமி செட்டியார் கம்பெனி,
2/70. பிராட்வே சென்னை

கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும்:—

அ. நா. அ. கடை ஈப்போ, அ. வீ ர. சித. உடுமலைப்பேட்டை,

(423) வயி. ராம. அரு. கடை ரெங்கூன், அ. நா. அ. வீடு கண்டனூர்.

## ஹனுமான் கணித ஆருடம்.

தரும நியாயமான 5 கேள்விகளுக்கு ரூ. 1. முதல். ஒவ்வொரு கேள்விக்கும் அணு 4. கடிதம் எழுதும்போதுள்ள நேரத்தைக் குறிப்பிடவேண்டும். எல்லாக் காரியங்களிலும் அனுகூலமான பலனைக் கொடுக்கும் "ஜய வசிகாணி தாயத்து" 1-க்கு ரூ. 2. ஸ்பெஷல் தாயத்து ரூ. 50. மற்ற விபரங்கட்கு நேரில் எழுதித் தெரிந்துகொள்ளவும்.

சென்னை சுதேசமித்திரன் எழுதுவது'எதிர்காலத்தையறிந்து சொன்னசோதிடர்

விலாசம்:— வி. கே. சடகோபாச்சாரியார்,
சோதிட சாஸ்திரி,
திருத்தணி, இந்தியா.

(424)

கேட்லாக் இனும். **Catalogue Free.**

## —சுதேசி கைத்தொழிலை—

## ஆதரியுங்கள்.




எல்லாவித கட்டிடங்களுக்கும் ஏற்றவாறு அநேக தினுசு இரும்புக் கிராதிகள், ஸ்பிரிங் கதவுகள், சுருள் கதவுகள், பூட்டுகள், தாப்பாள்கள் முதலிய இரும்புச் சாமான்கள் மிகவும் உறுதியாயும் எவ்விதத்திலும் உடையாததாயும் அழகாயும், நேர்வையாகவும் தயார் செய்து விலை சரசமாக ஏராளமாய் விற்பனைசெய்து வருகிறேம். நூதன தினுசுகள் தேவையானுல், குறித்த தினத்தில் தயார் செய்து கொடுக்கப்படும்.

**மகாலக்ஷ்மி இரும்புத் தொழிற்சாலை,**
P. N. இராஜகோபாலய்யர், மதுரை.

(425)

**14**-ம்வருடம் பிறந்துவிட்டது! **14**-ம் வருடம் பிறந்துவிட்டது!!

## "ஆனந்தபோதினி."

ஓர் உயர்தர தமிழ் மாதப் பத்திரிகை-

64 பக்கங்களில் உயர்ந்த வியாசங்களுடனும், ஆப்டோன் படங்களுடனும், லயன் பிளாக்குகளுடனும் வெளிவருவது

தமிழ் நாட்டில் உள்ள மாதசஞ்சிகைகளில் முதன்மை பெற்றது

14 வருடங்களாக நடைபெற்று வருகிறது.

**20,000 சந்தாதாரர்களுடையது.** **எல்லோரும் படிக்கத்தக்கது**

இந்தியா, பர்மா, சிலோன் ஆகிய உள் நாடுகளுக்கு

**வருட சந்தாரூபா 1—0—0**

பினங்கு, சிங்கபூர், நெட்டால் முதலிய வெளிநாடுகளுக்கு

**வருட சந்தா ரூ. 1—4—0 மாதிரிக் காப்பி இனும்.**

விலாசம்;— ஆனந்தபோதினி ஆபீஸ்,

(426) தபாற்பெட்டி No. 167 லாயர் சின்னத்தம்பி தெரு, சென்னை.

## காசிப் பட்டுச் சேலைகள்.

சரசவிலை! சரசவிலை!!

கீழேகண்ட சேலைகள் சகல நிறங்களிலும் கிடைக்கும். திருப்தியில்லாதவைகள் திரும்பப் பெற்றுக்கொண்டு வேறு திருப்தியுள்ளவைகளாக அனுப்பப்படும்.

1. சதுந்நலா பட்டுச்சேலை:—மிக உயர்ந்த தங்க சரிகை வேலைப்பாடுள்ளது. 12 முழம் சேலை 1-க்கு 60 முதல் ரூ. 150 வரை, 16 முழம் ரூ. 80முதல் ரூ. 175 வரை. 18 முழம் சேலை 1க்கு விலை ரூ. 90 முதல் 200 வரை.

2. தமயந்தி மின்னல்கோடி சேலை:—மேலே கண்டபடி ஜரிகை வேலைப்பாட்டுடன் உடலில் தங்க ஜரிகையினுல் கொட்டடி போட்டது. 12 முழம் சேலை 1-க்கு ரூ. 35 முதல் 100வரை. 16 முழம் ரூ. 45 முதல் 100 வரை. 18 முழம் சேலை 1-க்கு ரூ. 50 முதல் 150 வரை.

3. காரச்சி பட்டுச்சேலை:—தங்க ஜரிகையினுல் கினாவர் அல்லது உத்திராக்ஷக் கரையுடன் ஜரிகை முகதலையுள்ளது. 12 முழம் சேலை 1க்கு ரூ. 30 முதல் 75வரை 16 முழம் சேலை 1-க்கு 35 முதல் 80 வரை. 18 முழம் சேலை 1க்கு ரூ. 40 முதல் 100 வரை. மற்றும் சகல விதமான பட்டுச் சரக்குகள், காஷ்மீரம் சால்வைகள், கம்பளிப் போர்வைகள், பித்தளைப் பாத்திரங்கள், உருத்திராக்ஷங்கள் முதலிய சரக்குகள் மிகவும் சரசமாக அனுப்பப்படும். விலை ஜாபிதா இனும்.

*Manager,* மானேஜர்,
**Silk Pitamber Co** பட்டு பீதாம்பர கம்பெனி,
BENARES CITY. காசி.

(427)

(பத்திராதிபர்) சொ. முருகப்பனுல் காரைக்குடி குமரன் பவர் பிரஸில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பட்டது.

